ரூ. 8.00

# மக்கள் சிந்தனை




திருவள்ளுவர் ஆண்டு 2045 பங்குனி - சித்திரை
மார்ச் - ஏப்ரல் 2014

சமய சமுதாய இலக்கிய
திங்களிதழ்

குன்றக்குடி அருள்தரு சண்முகநாதப் பெருமான் திருக்கோயில்
திருக்குட நன்னீராட்டுப் பெருவிழா
19-3-2014

சிறப்பாசிரியர் : தவத்திரு குன்றக்குடி பொன்னம்பல அடிகளார்

# மக்கள் சிந்தனை

நிறுவனர் : தவத்திரு குன்றக்குடி அடிகளார்

திருவள்ளுவர் ஆண்டு 2045 மாதம் : பங்குனி - சித்திரை

மலர் : 29 இதழ் : 3 & 4

## நம் கடன் பணி செய்து கிடப்பதே!

ஏறுமயில் ஏறி விளையாடு முகம் ஒன்றே!
ஈசருடன் ஞானமொழி பேசும் முகம் ஒன்றே!
கூறும் அடியார்கள் வினை தீர்க்கும் முகம் ஒன்றே!
குன்று உருவ வேல் வாங்கி நின்ற முகம் ஒன்றே!
மாறுபடு சூரரை வதைத்த முகம் ஒன்றே!
வள்ளியை மணம் புணர வந்த முகம் ஒன்றே!
ஆறுமுகம் ஆன பொருள் நீ அருள வேண்டும்
ஆதி அருணாசலம் அமர்ந்த பெருமாளே!




குன்றுதோறும் கொலுவீற்றிருந்து அருள்புரியும் குமரக் கடவுள் குன்றக்குடிக் குமரனாய் அருள்தரு சண்முகநாதப் பெருமானாய் எங்கும் அருள்பாலித்துக்கொண்டிருக்கின்றான்!

இங்கு குமரன், மயில்மலை மீது எழுந்தருளி அபயம் அளிக்கும் ஆண்டவனாய் மயில்ஏறி விரைந்து வந்து தொழுத கை துன்பம் துடைக்கும் தோழனாய்க் காட்சி தருகின்றான்!

எண்ணற்ற அற்புதங்களை நிகழ்த்திய அற்புதத்தின் அற்புதம் சண்முகநாதப் பெருமான். பேசாக் குழந்தையை பேசவைத்த பெருங்கருணை அவன் கருணை. வீரமருது பிளவை நோய் தீர்த்த மருந்தீசன் சண்முகநாதன். அபயக்குரல் கொடுத்தவரை எல்லாம் அரசவனத்தில் அரவணைத்திட்ட அன்பு தெய்வம்! கண்ணபிரான், அகத்தியர், வசிட்டர், விசுவாமித்திரர், நான்முகன், கருடன், இந்திரன், சூரியன், மன்மதன், பாண்டவர், நாரதர், இடும்பன் ஆகியோர் சண்முகநாதப் பெருமானை வழிபட்டுப் பெருமகிழ்வு பெற்ற திருத்தலம்.

இன்றைக்கு எண்ணூறு ஆண்டுகள் பழமை வாய்ந்த 12ஆம் நூற்றாண்டைச் சார்ந்த இத்திருக்கோயில் முதல் திருப்பணியான மூலவர்

மண்டபம், அதற்குக் கீழே உள்ள மண்டபங்கள் நகரத்தார் பெருமக்களின் திருப்பணியாகும். கீழக்கோயில் முன் மண்டபத்தை சிறுகூடல்பட்டியைச் சேர்ந்த குமாரப்பேட்டை ஜமீன்தார் வெங்களப்ப நாயகர் எழுப்பினார்.

திருவண்ணாமலை ஆதீனம் 43ஆவது மகாசன்னிதானம் திருவருள்திரு தெய்வசிகாமணி பொன்னம்பல தேசிக பரமாச்சாரிய சுவாமிகளின் அருளாட்சிக் காலத்தில் கண்டரமாணிக்கம் மெ.கி.பெரி.சோமசுந்தரம் செட்டியார் அவர்களால் சிறிய பழுதுகள் பார்க்கப்பெற்று 24.06.1940இல் திருக்குட நீராட்டுவிழா நடைப்பெற்றது.

நமது 45ஆவது குருமகாசன்னிதானம் தெய்வசிகாமணி அருணாசல தேசிக பரமாச்சாரிய சுவாமிகள் திருவுளப்பாங்கின் வண்ணம் காரைக்குடி திரு.மெ.நா.சித சிதம்பரம் செட்டியார் அவர்களும் திரு.மெ.செ.ச.மு.மெ. முத்துராமன் செட்டியார் அவர்களும் திருப்பணிக்குழுவில் செயலாளர்களாக இருந்து மிகச்சிறப்பாகத் திருப்பணிகளை நிறைவேற்றினார்கள். முழுமையாகத் திருக்கோயில் புனருத்தாரணம் செய்யப்பெற்றது. பெருந் திருப்பணியாக இத்திருப்பணிகள் நிறைவேறி பிரமாண்டமான யாகசாலை பூசைகள் 24.04.1979இல் தொடங்கி நிகழ்ந்தது. திருக்குடமுழுக்கு விழா 03.05.1979 அன்று நிகழ்ந்தேறியது.

1985ஆம் ஆண்டு படித்துப் பட்டம் பெற்ற நிலையோடு மகாசன்னிதானத்தை தரிசித்து ஆசிபெற்றுப் பின் மலை ஏறி சண்முகநாதனை வழிபட்டோம்! அருள் ஓலக்கம் எழுப்பிக் கொண்டிருந்த சண்முகநாதன் ஆலயத்தில் வீழ்ந்து வணங்கி உண்டியலில் காணிக்கை செலுத்திவிட்டு, பணி வேண்டிப் பணிந்து விண்ணப்பித்தோம்!

எனக்குப் பணி செய்! என்பது அவன் ஆணை போலும்! திருமடத்தில் துறவறம் மேற்கொண்ட நாள் முதல் தினந்தோறும் அவன் திருமுகம் கண்டு வணங்கி வழிபடுவோம்!

மலை ஏறினால் உடலின் சுமை குறையும்!
மாதேவன் முருகன் முன்பு உருகினால்
இதயத்தின் சுமை குறையும்!
என்னே அவன் பெருங்கருணை!

13.12.2009 அன்று குன்றக்குடி அருள்தரு சண்முகநாதப் பெருமான் திருக்கோயிலுக்கு பாலாலயம் (இளங்கோயில்) நிர்மாணம் (திருப்பணிக்கான கால்கோள்) செய்யப்பெற்றது. அந்நாளைய இந்துசமய அறநிலையத்துறை ஆணையர் திரு.பி.ஆர்.சம்பத்குமார் இ.ஆ.ப., மேனாள் ஆணையர் மற்றும் முதன்மைச் செயலர் திரு.த.பிச்சாண்டி இ.ஆ.ப.,

சிவத்திரு டாக்டர் பிச்சைக் குருக்கள், திரு.முத்தையா ஸ்தபதி ஆகியோர் கலந்துகொண்டனர்.

தமிழக அரசின் இந்துசமய அறநிலையத்துறை மூலமும் நிதியுதவி பெறப்பெற்றது. மேலும் பலரும் இத்திருப்பணிகளில் உபயதாரர்களாகப் பங்கெடுத்துக்கொண்டனர்.

புதிய வண்ண ஓவியங்களால் எழிலூட்டும் மண்டபங்கள், மலையேறிச் செல்லும் பொழுது கைபிடித்துச் செல்வதற்கான இலகுவான கைப்பிடிகள், இளைப்பாறிச் செல்ல அமர்வு பெஞ்சுகள், பாதுகாப்பிற்காகக் கண்காணிப்பு கேமரா வசதி, பாதுக்காக்கப்பட்ட குடிநீர்வசதி, முழுமையான மின்வயரிங், புதுப்பிக்கப்பட்ட கோபுரங்கள், விமானங்கள் புதுப்பித்து வண்ணம் வைத்து முழுத்திருப்பணியாய் நிறைவேறியுள்ளது.

தவத்திரு பாலமுருகனடிமை சுவாமிகள், நீதியரசர் திரு. எம்.சொக்கலிங்கம், தொழிலதிபர்கள் முத்தமிழ்வேள். டாக்டர். திருமிகு. எம்.ஏ.எம்.இராமசாமி செட்டியார், முத்தமிழ்வேள் டாக்டர்.திருமிகு. ஏ.சி.முத்தையா செந்தமிழ்த்திலகம் திருமதி.தேவகி முத்தையா, அரசு வழக்கறிஞர் திரு.சண்முகநாதன், துபாய் திரு.சிவக்குமார், அறந்தாங்கி திரு.சுப்பு, புதுக்கோட்டை திரு.பி.செந்தில்குமார், திரு.சக்திவேல், திரு.சி.ஆதீனமிளகி, திரு.அழகுஜெயபால், கோவை லோட்டஸ் வெங்கடாஜலம் செட்டியார், தேவகோட்டை திருமதி சாந்தி ஆச்சி சின்னசேவுகன் செட்டியார், பி.எஸ்.ஆர்.ஏ.ராமசாமி செட்டியார், விசாலம் சிட்பண்ட் திரு.விசுவநாதன், திரு.பழ.படிக்காசு, புதுக்கோட்டை திரு.சீனுசின்னப்பா, ஈரோடு எம்.ஆர்.கலர்லேப் திரு.நாராயணன், காரைக்குடி கிட் & கிம் திரு. ஐயப்பன், மெட்லா அழகுபிள்ளை குடும்பத்தார்கள், மதுரை திரு.பி.தேனப்பன் முதலியோர் திருப்பணிகளின் உபயதாரர்களாக பங்கெடுத்துக்கொண்டனர். கிராமத்தார்கள், மண்டகப்படித்தாரர்கள், உள்ளூர் வெளியூர் அன்பர்கள் மற்றும் பலரும் குடமுழுக்குப் பெருவிழாவில் உபயதாரர்களாகப் பங்கெடுத்துக்கொண்டனர்.

நமது திருமடத்தில் அன்பர்களுக்கு உணவளித்த மேலூர் திரு.ரவி அவர்கள் தொண்டு பாராட்டுதலுக்குரியது.

யாகசாலை அருகில் மிகப்பெரிய அளவில் அன்னதானம் வழங்கிய மானாமதுரை ஞானசேகர சுவாமிகள் தொண்டும் பாராட்டுதலுக்குரியது.

33 குண்டங்கள் அமைத்து பிரமாண்டமான யாகசாலையை உயர்திரு.எல்.பி.வீரப்பச் செட்டியார் தம் குடும்பத் திருப்பணியாய் எடுத்துச் செய்தார். யாகசாலை முகூர்த்தக்கால் ஊன்றிய நாள் அன்றே உயர்திரு.எல்.பி.வீரப்பச்செட்டியார் இல்லத்தில் வடிவேலனின் வண்ணமயில்

இறங்கி ஆசீர்வதித்தது. அருள்மிகு சண்முகநாதப்பெருமானின் முழுமையான ஆசீர்வாதத்துடன் யாகசாலைபூசைத் திருப்பணிகள் நடைப்பெற்றன. அண்மையில் மணிவிழாக் கண்ட உயர்திரு.எல்.பி.வீரப்பச் செட்டியார் யாகசாலைபூசைத் திருப்பணிகளை நிறைவேற்ற வேண்டும் என்பது அருள்தரு சண்முகநாதப் பெருமானின் திருவுள்ளம் போலும்! 108 நாதஸ்வரக் கலைஞர்கள் இசைவேள்வி நிகழ்த்த, வேத விற்பன்னர்கள், ஆகம அறிஞர்கள், திருமுறை ஓதுவாமூர்த்திகள் எனச் செந்தமிழும், வடமொழியும் இரண்டறக் கலந்த வேள்வியாய் நிகழ்ந்தது! திருமுறை ஓதுவாமூர்த்திகள் ஓதிய செந்தமிழ், வேள்விச்சாலையில் அருள் ஓலக்கம் ததும்பச் செய்தது.

உயர்திரு.எல்.பி. வீரப்பச் செட்டியார் வி.விசாலாட்சி ஆச்சி உடன் நின்று குன்றக்குடி அருள்தரு சண்முகநாதப் பெருமானின் குடமுழுக்குப் பெருவிழாவில் ஆற்றிய சிறப்பிற்கு ஈடு இணை இல்லை! 27.06.2002 அன்று அண்ணாமலையார் அருளால் திருவண்ணாமலை திருக்கோயில் குடமுழுக்கு பெருவிழாவை உலகம் போற்றச் சிறப்புடன் நிகழ்த்தினார்கள். எண்ணற்ற திருக்கோயில்களின் குடமுழுக்கு பெருவிழாவை சிறப்புடன் நிகழ்த்திய பெருமைக்குரியவர்கள்.

இவர் தம் அருமைப் பெற்றோர்கள் தெய்வத்திரு. எல்.பி. பெரியகருப்பன் செட்டியார், சிவத்திரு.சோலைச்சி ஆச்சி ஆகியோர் செய்த பெருந்தவத்தின் பயனாய் எண்ணற்ற குடமுழுக்கு விழாக்களை நடத்தி வருகின்றனர். குறிப்பாக குன்றக்குடி அருள்தரு சண்முகநாதப் பெருமான் திருக்கோயிலில் நிகழ்த்திய குடமுழுக்குவிழா முழுமையாக அருள்தரு சண்முகநாதப் பெருமானின் ஆசீர்வாதத்தினால் நிகழ்த்திய குடமுழுக்கு விழா. உலகம் இன்றும் என்றும் வாழ்த்திப் பாராட்டிக்கொண்டிருக்கும்.

சிவத்திரு சோலைச்சி ஆச்சி, உயர்திரு எல்.பி. வீரப்பச் செட்டியார், விசாலமனம் படைத்த திருமதி விசாலாட்சி ஆச்சி இவர் தம் அருமைப் பிள்ளைகளான மகன் பி.வி.ஆர். முத்தையா மருமகள் சொர்ணலட்சுமி முத்தையா மகள்கள் அழகம்மை சிதம்பரம், லெட்சுமி சேவுகன் ஆகியோர் எல்லா நலமும் வளமும் பெற்று வாழ எல்லாம்வல்ல அருள்தரு சண்முகநாதப் பெருமானை எண்ணிப் போற்றி துதிக்கின்றோம்.

திருவாவடுதுறை ஆதீனம் குருமகாசன்னிதானம், மயிலம் ஆதீனம், வேளாக்குறிச்சி திருப்புகலூர் ஆதீனம், கோவை கௌமார மடம் சுவாமிகள், சிவகங்கை மாவட்ட நீதிமன்ற நடுவர் பெருமக்கள் இரண்டாம் நாள் யாகசாலை வழிபாட்டில் கலந்து கொண்டு சிறப்பித்தார்கள்.

நீதியரசர் திரு.எம்.சொக்கலிங்கம், அரசு வழக்கறிஞர் திரு.சண்முகநாதன், பிள்ளையார்பட்டி கோவிந்தானந்த சுவாமிகள்

ஆகியோர் மூன்று நாள் நிகழ்விலும் கலந்து கொண்டு சிறப்பித்தார்கள்.

இரண்டாம் நாள் நிகழ்ச்சியில் திரு.வெ.இறையன்பு இ.ஆ.ப., அவர்கள் தலைமையில் கோடைப்பண்பலை வானொலி நிலைய இயக்குநர் திரு.சுந்தரஆவுடையப்பன் மற்றும் இந்துசமய அறநிலையத்துறை அமைச்சர் அவர்களின் நேர்முக உதவியாளர் திரு.மணிகண்டன் ஆகியோர் சமயக் கருத்தரங்கில் கலந்து கொண்டு சிறப்பித்தார்கள்.

முதல்நாள் இசைநிகழ்ச்சியும் மூன்றாம் நாள் நாட்டிய நிகழ்ச்சியும் நடைப்பெற்றது.

அருள் ஓலக்கம் எழுப்பிய 19.03.2014 புதன்கிழமை அதிகாலைப் பொழுது காளத்திநாதர் பூசைகள் நடைப்பெற்றபின் அருளாலயத்தில் கொலுவீற்றிருந்து அருள்பாலிக்கும் நமது குருமகாசன்னிதானம் அவர்களை வழிப்பட்டபின்பு யாகசாலை நோக்கி திருப்பயணம்.

திருப்பனந்தாள் இணை அதிபர், தருமபுரம் தம்பிரான் சுவாமிகள், பேரூர் இளைய அடிகள், இரத்தினகிரி தவத்திரு பாலமுருகன் அடிமை சுவாமிகள், கலவை சச்சிதானந்த சுவாமிகள், பிள்ளையார்பட்டி கோவிந்தானந்த சுவாமிகள், கோவிலூர் சுவாமிகள், பழநி சாது சண்முக அடிகள், துழாவூர் ஆதீனம், பாதரக்குடி சுவாமிகள், முன்னாள் அமைச்சர், திருப்புத்தூர் சட்டமன்ற உறுப்பினர் உயர்திரு.கே.ஆர்.பெரியகருப்பன், காரைக்குடி சட்டமன்ற உறுப்பினர் உயர்திரு.சோழன் சித.பழனிச்சாமி, பரமக்குடி உதவி ஆணையர், முனைவர்.கே.பாலகிருஷ்ணன், முனைவர் ச.மோகன் ஆகியோர் ஆறாம்கால வேள்வியிலும், திருக்குடநன்னீராட்டுப் பெருவிழாவிலும் கலந்து கொண்டனர்.

எந்த யாகசாலையிலும் இல்லாத பெருஞ்சிறப்பு முதல் இரண்டு நாள்களும் உற்சவமூர்த்தி அருள்தரு சண்முகநாதப் பெருமான் திருக்கோயிலிலிருந்து யாகசாலைக்கு எழுந்தருளி அருள்பாலித்தது.

குடமுழுக்குவிழா கடம் புறப்படும் தருணம்! இறைமை உணர்வுகள் பொங்கித் ததும்ப எங்கும் புனிதம் பொங்கி வழியும் தருணம்! கண்களில் அன்புக் கண்ணீர் சொரிந்தது! ஆவியோ, அத்தன், ஆனந்தன் எம்பெருமான் சண்முகநாதன் உணர்வுகளைச் சுமந்தது! உலக நீதியின் உறைவிடமாகிய இறைநீதி அண்ணல் திருக்கடங்களில் உறைவிடமாய் இருக்க, அந்தப் புனிதக் கடங்கள் திருக்கோயில் கோபுரங்களை நோக்கி புறப்படுகிற புனிதப் பயணம்!

நம்மை மறந்தோம்!

நான் அற்றுப் போனது!

ஆணவத்தை மடை மாற்றும், சம்ஹார வேலன், சஞ்சரித்து வருகின்றான்!

இடர்களையும் ஆறுமுக வேலன்
அகிலம் எல்லாம்
அருள்பாலித்து வருகின்றான்!

எங்கும் மக்கள் வெள்ளம், குன்றக்குடியில் மயில்மலையைச் சுற்றி மக்கள் வெள்ளம்!

கடலின் நடுவே குன்றுபோல்
மக்கள் வெள்ளத்தின் நடுவே மயில்மலை!
விண்ணுக்கும் மண்ணுக்கும் விரிந்து நின்று
விஸ்வரூபம் எடுத்து காட்சி தருகின்றான்
கலியுகக் கந்தன்!
கடங்களை நோக்கி
வானில் கருடன் வட்டமிட
பச்சைக் கொடி அசைய
கோபுர கலசங்களில் புனித நீர்
பொங்கி வழிந்தது!
என்னே! கந்தனின் பெருங்கருணை!
பேராற்றலின் பெருந்தகைமையின் வெளிப்பாடு!
எங்கும் அவன் அருள் வெள்ளம்!
பொங்கிப் பிரவகித்து வழிந்து ஓடுகின்றன!
மருதிருவரின் பிளவைநோய் தீர்த்த
பெருங்கருணைப் பேராற்றல்!
மாமன்னர் மருது எடுத்த கற்றளி
காலம் எல்லாம் அவன் புகழ்பாடும்!
சண்முகநாதன் மீது கொண்ட பக்தி
உலகுக்கு பறைசாற்றும்!

மாண்புமிகு தமிழக முதல்வர் அம்மா அவர்களின் சீரிய தலைமையில் செயல்படும் இந்துசமய அறநிலையத்துறை அமைச்சர் மாண்புமிகு பி.செந்தூர்பாண்டியன் அவர்கள் குடமுழுக்கு விழாவிற்கு உடனடியாக வாழ்த்துச் செய்தி அனுப்பியதோடு குடமுழுக்குவிழா சிறப்பாக நடைபெற தொலைபேசி வழி தம் மகிழ்ச்சியையும் வாழ்த்துக்களையும் தெரிவித்து நம்மையும் உற்சாகப் படுத்தினார்கள். தமிழ்நாடு இந்துசமய அறநிலையத்துறைச் செயலர் அவர்களும் வாழ்த்துக்களை தெரிவித்துக் கொண்டார்கள். இந்நாளைய ஆணையர் உயர்திரு.ப.தனபால் அவர்கள் அருள்தரு சண்முகநாதன் திருக்கோயிலின்பால் மிகுந்த ஈடுபாடு கொண்டு திருப்பணிகளுக்கு உடனுக்குடன் அனுமதி வழங்கி குடமுழுக்கு விழா சிறப்பாக நடைபெற அனுமதியும் வழங்கி உறுதுணை புரிந்தார்கள். அவரின்

சீரிய முயற்சியாலும் உழைப்பாலும் தமிழக அரசு இந்துசமய அறநிலையத்துறை சிறப்பாகச் செயல்பட்டுவருகிறது.

இந்தக் குடமுழுக்கு விழாவில் இந்துசமய அறநிலையத்துறை பரமக்குடி உதவி ஆணையர் செல்வி.தி.சு.ரோசாலிசுமதா, மடப்புரம் உதவி ஆணையர் திரு.வி.சுந்தரமூர்த்தி, நிர்வாகப் பொறியாளர் திரு.வெ.கணேசன், உதவிக்கோட்டப் பொறியாளர் திரு.ச.சுப்பிரமணியன், உதவிப் பொறியாளர் திரு.ஏ.குணசேகரன், ஆய்வாளர் திரு.மூ.சி.மாரியப்பன் ஆகியோர் கலந்து கொண்டு சிறப்பித்தார்கள்.

யாகசாலை பூசைகள் தொடங்கிய நாள் முதல் குடமுழுக்கு வரை அருள்நெறித்தந்தையின் அருளாலயத்தையும் குன்றக்குடியையும் ஒளி வெள்ளத்தில் மிதக்க வைத்த அரிமழம் திரு.எம்.எஸ்.எம்.சோமு அவர்களின் திருப்பணி பாராட்டுதலுக்குரியது.

பாலாலயம் செய்து திருப்பணிகளை தொடங்கிய நாள் முதல் திருப்பணிகளையும் குடமுழுக்கு விழாவையும் திட்டமிட்டுச் செயலாற்றியவர் நம் ஆதீன ஐந்துகோயில் திருக்கோயில்கள் நேர்முக உதவியாளர் திரு.க.நீலமேகம் அவர்கள், செயற்கரிய பணியைச் செய்திட்ட செயல்வீரர்! நமது ஆதீனம் மற்றும் ஐந்துகோயில்கள் திருப்பணிகளை நிறைவேற்றிடவே பிறந்த பிறவி இவர்! எந்நாளும் அருள்தரு சண்முகநாதன் அருள் அவருக்கு கிடைத்திட பிரார்த்திப்போம்!

பொறியாளர் திரு.சுப்பிரமணியன் அவர்கள் நமக்கு அல்ல, திருப்பணிகளுக்கு கிடைத்திட்ட வரப்பிரசாதம்! 80வயது இளைஞர்! வெயில், மழை, பனி பாராது மலை ஏறி, மலை ஏறி அவர் ஆற்றிய உண்மையான நேர்மையான திருப்பணிகளுக்கு ஈடு இணை இல்லை! வெயில் மழை பாராது எப்போதும் பக்தர்களுக்குக் குடைபிடிக்கும் புதிய மண்டபங்கள் எப்போதும் அவர் பெயரைச் சொல்லிக் கொண்டிருக்கும். மழைநீர் வடிகால் அமைத்து மழைநீர் சேகரிப்பு, தரமான கட்டுமானப் பணிகள் ஆகியவை இவரின் தனி முத்திரைகள். திருப்புத்தூர், பிரான்மலை மற்றும் திருக்கோளக்குடி திருக்கோயில்களில் இவர் திருப்பணிகள் நிறைந்து நிற்கும்! எல்லாம்வல்ல அருள்தரு சண்முகநாதப் பெருமான் அவருக்கு நீடித்த வாழ்வை வழங்க வேண்டும். அவரின் உதவியாளர் துணைப் பொறியாளர் திரு.ஜெகநாதன் அக்கறையுடன் திருப்பணியாற்றியவர். அடக்கமானவர்! வளர்ந்து வருவார்! வாழ்த்துக்கள்.

கல்சுமந்து, மண்சுமந்து, பொதிசுமந்து, மலையில் கிடந்து புரண்டு, உருண்டு, திருப்பணிகளைச் செய்தவர் பால்பண்ணைச் செயலர் வ.தியாகராஜன்! நம் அருள்நெறித் தந்தையின் பூர்வாசிரம உறவு! ஆனால் திருப்பணிகள் நிறைவேற்றுவதற்காக தன்னலம் கருதாத பழுதிலா துறவு!

சிக்கனம், நேர்மை, உண்மை, கடகடவெனப் பேசிக் காரியம் ஆற்றும் செயல்வீரர்! வளர்க அவர்தம் தொண்டு!

குன்றக்குடி அருள்தரு சண்முகநாதன் திருக்கோயில் ஒளிவிட்டு பிரகாசிப்பதற்கு இரவு பகல் பாராது, இமை துஞ்சாது, சோர்விலாது அர்ப்பணிப்பு உணர்வுடன் உழைத்தவர் நம் மின்வாரிய அலுவலர் தட்டட்டி திரு.செல்லையா. தம் அரசுப் பணிகளுக்கு இடையூறு இல்லாமல் அப்பணியிலும் மக்களுக்குக் கடமைகளை, வேலைகளைச் சிறப்பாக நிறைவேற்றியும் சண்முகநாதப் பெருமான் திருக்கோயில் மின் வயரிங், குடிநீர் வசதி, அபிஷேகநீர் ஏற்பாடு ஆகிய திருப்பணிகளை நிறைவேற்றி, திருக்கோயில் பணிகளை விரும்பி எடுத்துக்கொண்டு பணியாற்றிய இவரின் பணிகளுக்கு ஈடு இணை இல்லை!

திருப்பணிகளின் பலநிலைகளில் ஒருங்கிணைந்து பணியாற்றிய நம் ஆதீன நேர்முகஉதவியாளர் திரு.சு.செல்வராஜ், தம் உடல் தளர்ந்த போதும், சண்முகநாதன் மேல் கொண்ட பக்தியால் தளராது சண்முகநாதன் மீது ஆறுமுகன் பாமாலை பாடிய ஆதீனப் புலவர் திரு.மரு.பரமகுரு படைத்திட்ட குன்றக்குடித் தலவரலாறு அரிய ஆன்மீக ஞானக் கருவூலம் ஆகும். 1979இல் நடைபெற்ற குடமுழுக்கு விழாவின்போது இவரால் படைக்கப்பட்ட குன்றக்குடித் தலவரலாறு போற்றிப் பாதுகாக்க, படிக்க வேண்டிய அருந்தமிழ்ப் பெட்டகம் ஆகும். நீண்ட நெடிய வரலாற்று ஆன்மீகப் பார்வையோடு கூடிய இத் தலவரலாறு காலத்தை வென்று நிலைத்து நிற்கும் ஞானக் கருவூலம். 2014ஆம் ஆண்டு குடமுழுக்குவிழா மலர், வாடிய உடம்போடு, வாடாமல் அவர் செதுக்கித்தந்த பக்திமலர்!

வரம் தரம் வேண்டும் சாமி!
மரு.பரமகுரு நலம் பெறவேண்டும்
சண்முகநாதசுவாமி!

நம் தலைமையக ஆதீன தேவஸ்தான அனைத்து அலுவலர்கள், பணியாளர்கள், குன்றக்குடி திருக்கோயில் பேஷ்கார் கரு.ராமையா, டிவிஷன் பேஷ்கார் எஸ்.சிவானந்தம், மணியகாரர் சுந்தரராஜ் பணிகள் பாராட்டுக்களுக்குரியவை.

நம் கரங்களாய், தோள்களாய், கண்களாய், செயல்பட்ட நமது அன்பு உதவியாளர்கள் காசாளர் மு.காளிதாஸ், கி.சிங்காரவடிவேல், கணிப்பொறி பா.ராஜசேகரன், நூலகர் அ.பழனிக்குமார், நமது பணிவிடை ப.கல்யாணசுந்தரம், அர்ப்பணிப்பு உணர்வுடன் கணிப்பொறி பணிகளை நிறைவேற்றிய திருமதி.திலகவதி அய்யப்பன், ஆசிரியர் நாச்சிமுத்து, வே.முத்தையன், சண்முகநாதன் அச்சக மேலாளர் பழ.பாண்டித்துரை, சுப.கணேசன் ஆகியோர் பணிகள் பாராட்டுதலுக்குரியது.

திருப்பணி என்பது நம் பணி அல்ல! இறைமையின் ஆசீர்வாதம்! திருப்பணிகளில் தூணாய் நின்ற பெருமக்கள் ஏராளம். டாக்டர். சிவத்திரு பிச்சைக் குருக்கள், குன்றக்குடி பாலுக்குருக்கள், ரவிக் குருக்கள், சங்கர் குருக்கள், செந்தில் குருக்கள் போன்றவர்களின் பணிகள் பாராட்டுக்குரியவை!

குடமுழுக்குவிழா மற்றும் யாகசாலைத் திருநிகழ்வுகளை அற்புதமாக படம் எடுத்துள்ள ஆதீனப் புகைப்படக் கலைஞர் திரு.சாய்தர்மராஜ், சிறப்பாக வீடியோ காட்சிகளை எடுத்து தந்துள்ள திரு.சதாசிவம், அழைப்பிதழ்கள் மற்றும் குடமுழுக்கு விழா மலர் ஆகியவற்றை வடிவமைத்து தந்த பொன்னி கிராஃப் ஆர்ட்ஸ் திரு.மணிவண்ணன் ஆகியோர்கள் பணிகள் பாராட்டுதலுக்குரியவை!

இத்திருக்கோயிலுக்கு காலங்காலமாய் தொண்டுகள் ஆற்றிவரும் பெருமக்கள், நாட்டார்கள், நகரத்தார்கள், அருள்தரு சண்முகநாதப் பெருமானைத் தங்கள் தோள்களில் தாங்கும் பெரும்பேறு பெற்றவர்களாகிய சின்னக் குன்றக்குடி ஊரார்கள், அமரம்சேர்வைக்காரர்கள், திருக்கோயில் தொண்டுபுரியும் முத்துராஜாக்கள் திருக்கோயில் பணிகள், தொண்டுகள், ஊழியங்கள் செய்யும் அனைத்துக் கிராமத்தார்கள், மண்டகப்படிதாரர்கள், நன்கொடையாளர்கள், குன்றக்குடி ஊராட்சிமன்றம், அரசு ஆரம்ப சுகாதார நிலையம், வேளாண் அறிவியல் நிலையம், மக்கள் கல்வி நிலையம், கல்வியியல் கல்லூரி, பள்ளிகள், தொழிற்பயிற்சி நிலையம், குன்றக்குடி ஊர்ப் பொதுமக்கள் ஆகியோர் அனைவரையும் நன்றியோடு நினைத்து தூணாய் இத்திருப்பணியில் நின்ற இப்பெருமக்களுடன் துரும்பாய் நாமும் பணி செய்யும் பேறு தந்த காளத்தி அண்ணலையும் சண்முகநாதப் பெருமானையும் எண்ணி எண்ணி நினைந்து உருகி, தோன்றாத் துணையாய் என்றும் எப்பொழுதும் இமைப்பொழுதும் பிரியாது நம்மை வழிநடத்தும் குருமகாசன்னிதானம் அவர்களையும் வணங்கி,

காலம் அறிந்து கருணை புரியும்
குன்றக்குடிக் குமரனை,
அனைத்தும் தரும் ஆறுமுகனை,
சகலமும் தரும் சண்முகநாதனைப் போற்றித் துதித்து வழிபடுவோம்!
அனைவருக்கும் இனிய நெஞ்சம்நிறைந்த நல்வாழ்த்துக்கள்!
நம் கடன் பணி செய்து கிடப்பதே!
வெற்றிவேல் முருகனுக்கு அரோகரா!
குன்றக்குடிக் குமரனுக்கு அரோகரா!

என்றும் வேண்டும் இன்ப அன்புடன்,

பொன்னம்பல அடிகளார்

(சென்ற இதழ்த் தொடர்ச்சி)

# திருவாசகத் தேன்

## (தவத்திரு குன்றக்குடி அடிகளார்)

### உயிரின் தவிப்பு

யானை பெரிய விலங்கு. ஆம்! உடலால் பெரிய விலங்கு! அதனால் பெரிய கையால் உண்கிறது. தும்பிக்கை நீண்ட பெரிய கை! ஒரே நேரத்தில் தும்பிக்கையிலும் வாயிலும் உணவு வைத்துக் கொண்டு அளவுக்கு அதிகமாக உண்டு, ஊன் பெருக்கும் யானை! அந்தோ பரிதாபம்! தன்னை, தன் உடலை அறிந்து கொள்ள இயலாதது யானை! சமய நெறியில் கடவுளைத் தெரிந்து கொள்ளுதல், கடவுளை வழிபடுதல் இரண்டாம் நிலையே! முதலில், மனிதன் தன்னை அறிந்து கொள்ளுதல் வேண்டும். அதனால்தான் மாணிக்கவாசகர் ஆன்ம ஆய்வில் "நான் ஆர்" என்று முதலில் தன்னைப் பற்றிய ஆய்வைத் தொடங்குகின்றார். "தன்னையறிதல்" முதல் கடமை! தன்னுடைய குறைகள் அறிந்தால் தானே நிறைகளை நாடிப் பயணம் செய்ய இயலும்? "தம்மையறிந்து தலைவனை உணர்தல்" என்பது மெய்கண்டார் வாக்கு!

மனிதன் யார்? மனிதன் தானா! மிருகத்தில் மனிதன்; மனிதனில் மிருகம்; மனிதனில் மனிதன் என்ற படிமுறைகள் உண்டு! இந்த வரிசையில் மனிதன் யார்? தான் யார் என்று அறியாத நிலையில் வளர்ச்சியில்லை! ஆதலால், தன்னையறிதல், வாழ்க்கையில் முதல் நிலை! யானைக்கு எப்படி தன்னை தன் உடலை அறிய முடியாத நிலையோ அதுபோலவே மனிதனுக்கும் தன்னை அறிய முடியாத நிலை! யானை, இரு கையாலும் உண்டு ஊனைப் பெருக்கி வளர்த்துக் கொள்கிறது! இன்றைய மனிதனின் நிலை என்ன? எங்குப் பார்த்தாலும் உணவுச் சாலைகள்! இரை தேடி அலைகிறான்! திருக்கோயில்களையும் உணவு விற்கும் சாலைகளாக மாற்றிவிட்டான்! உண்டி நாலு விதத்தால் அறுசுவையில் தேர்ந்து உண்டு ஊனினைப் பெருக்கி வளர்கிறான்! இதன் விளைவே நீரிழிவு நோய்! உடற் கனம்! இதயப் பாதிப்பு! மூட்டு வலிகள்! ஊனின் எடை குறையவேண்டும்! ஊனாகிய உடல் ஆன்மாவுக்குப் பணி செய்யவேண்டாம்! ஊன் உருகுதல் வேண்டும்!

யானை, கட்டுத் தறியில் தன் தலையில் தானே புழுதியை அள்ளிப் போட்டுக்கொள்ளும்! அதுபோல ஆன்மா தன்னுடைய துன்பத்தைத் தானே வரவழைத்துக்கொள்கிறது. இன்பமே உலகத்து இயற்கை! துன்பமெலாம் மனிதனின் படைப்பபே! அறியாமையின் காரணமாக மனிதன் தனக்குத்தானே துன்பம் செய்து கொள்கிறான்! அறியாமை என்றால் என்ன? ஒன்றும் தெரியாமை அறியாமை அல்ல. ஒன்றைப் பிறிதொன்றாக முறைபிறழ உணர்தலே அறியாமை! "நன்றுடையான், தீயதிலான்" - இறைவன் என்பது திருஞானசம்பந்தர் வாக்கு! "நன்றுடையான்" என்று சொன்னால் போதுமே! ஏன் எதிர்மறையாலும் "தீயதிலான்" என்று சொல்ல வேண்டும்? எது நன்மை! எங்கும் எப்பொழுதும் எல்லாருக்கும் நன்மையாக எது இருக்கிறதோ அதுவே நன்மை! ஒரு பொழுது நன்மையாகவும் ஒருபொழுது தீமையாகவும் இருப்பது நன்மையாகாது. இன்று மனிதர் நன்மையென்று நினைத்துக்கொண்டிருப்பது தீமை கலந்த நன்மையையேயாம்! ஆதலால் பழக்க வாசனையால் தீமை கலந்த நன்மையை - தீமையாக உள்ளதை நன்மையாக மனிதர் அறியாமையால் கருதுகின்றனர். இறைவன் முற்றாக நன்மை. ஆதலால், மனிதர்கள் யானை தன் தலையில் மண்ணையள்ளிப் போட்டுக்கொள்ளுதல் போலத் தங்களுக்குத் தாங்களே தீமை செய்து கொள்கின்றனர். ஆதலால், மனிதருக்கு வரும் துன்பம், பிறர் செய்ததன்று, தீதும் நன்றும் பிறர்தர வாரா! கடவுள் தந்ததுமன்று! எல்லாம் அவரவர் செய்து கொள்வதே! யானை தலையில் புழுதி அள்ளிப் போட்டுக்கொண்ட கதைதான்!

அடுத்து யானை தன்னைக் கட்ட, சங்கிலியைத் தானே எடுத்துப் பாகனிடம் கொடுக்கும். அதுபோல மனிதன் தன்னைத்தானே வினைக் கட்டுகளுக்கு உட்படுத்திக் கொள்கிறான். ஆன்மாவின் முதற் பிறப்பு கருமேனி கழிக்க வந்த பிறப்பே! அறியாமை அகல இறைவன் அருளிச் செய்த பிறப்பே! அற்புதமான பிறப்பு. அறிவுக் கருவிகள் செயற்கருவிகள் இணைந்த மகத்தான தோற்றம். "வாய்த்தது நந்தமக்கு ஈதோர் பிறவி மதித்திடுமின்!" என்பது திருமுறை. ஆயினும் என்? உயிர்கள் தற்சார்பு, தன்முனைப்பு காரணமாக "நான்", "எனது", என்ற செருக்கின் வழியாக இருவினை பெருக்கி அல்லற்பட்டு உழல்கின்றன. வினைக்கட்டு - வினைத் துன்பம் உயிர்களின் ஈட்டம்! அவரவர் வினைவழி அவரவர் வந்தனர். எவர் எவர்க்கு உதவினர்? எவர் எவர்க்கு உதவிலர்? என்றெல்லாம் சிந்திப்பது தவறு. உயிர்கள் தமக்குத் தாமே யானையைப் போலக் கட்டுக்களைப் போட்டுக்கொள்கின்றன.

இவையெல்லாம் போகட்டும்! யானைக்குத் தன் மேல் யானைப் பாகன் இருந்து செலுத்துகிறான் என்பது தெரியுமா? உணருமா? தெரியாது! உணராது! அதுபோலத் தான் உயிர்களுக்கு! உயிர்களின் உயிருக்குள் உயிரதாக இருந்து விளங்கி உயிர்களை இயக்கிடும் கடவுளைப் பலர் அறியார்; உணரார். கடவுள் உயிர்க்குக் கருவாக, உயிராக விளங்கியருள் செய்யும் பான்மையை அறியாதன! உணராதன! வேடிக்கை என்னவென்றால் யானை தன் முதுகுப் புறத்தே இருந்து செலுத்தும் பாகனை அறிவதில்லை. ஆன்மாக்களோ உயிர் நிலையில் உயிர்க்கு உயிராக – கருவாக இருந்தருளும் கடவுளைத் தெரிந்து கொள்ள இயலவில்லை; தெரிந்து கொள்ளும் முயற்சி இல்லை. இதனால், விளைந்த பயன் என்ன? துன்பமே ஒழிய வேறில்லை. உயிர்க்கு உயிராக உள்ள இறைவனை நினைந்து, உணர்ந்து, அந்தப் பேரறிவு ஒளிக்காட்சியின் திசையில் வாழ்ந்தால் துன்பம் வராது. அங்ஙனமின்றி ஆணவத்தோடு தொடக்குண்டு ஆணவத்தின் வழி இயங்குவதால் கண்டதெல்லாம் துன்பமேயாம்! இந்த உலக இன்பங்களில் துன்பத் தொடக்கு இல்லாத – துன்பக்கலப்பு இல்லாத இன்பம் எது? ஒன்றும் இல்லை! அதிலும் இறை ஒளியுடன் தொடர்பில்லாதன எல்லாம் துன்பமேயாம்!

கடவுளைக் காணப் பலரும் முயற்சி செய்கின்றனர். புற்றாக, மரமாகத் தவம் செய்கின்றனர். ஆனாலும் கடவுட் காட்சி கிடைப்பதில்லை; திருவருட் சார்பில்லாத – திருவருள் துணையல்லாத ஆன்ம அறிவால் கடவுளைக் காண முடியாது. கடவுளைக் கண்ணால் சிலர் அல்லது பலர் காணாமையால் கடவுள் இல்லை என்றே கூறுகின்றனர். மானுடம் அறிவுப் படைப்பு! அறிவின் அனுபவத்தின் எல்லையில் கடவுட்காட்சி! விலங்குகள் – கால்நடைகள்! அவை சிந்திக்கும் இயல்பின அல்ல! மனிதன் காலால் நடக்கின்றான். அதனால் மனிதனைக் "கால்நடை" என்று கூற இயலுமா? விலங்குகள் கால்களால் மட்டுமே நடக்கும் இயல்பின. மனிதன் கால்களால் நடப்பதற்கு முன் சிந்தனையால் நடந்து, கருத்தால் நடந்து பின்தான் கால்களால் நடப்பான்! ஆதலால், உயிர்தோறும் உள்ளக் கருவாய், ஒளியாய் விளங்கும் கடவுளை அறிஞராயோர், ஞானியர் சிந்திப்பர்; உணர்வர்; காண்பர்! இங்ஙனம் கடவுளைக் காணவில்லையே என்று மாணிக்கவாசகர் கவலைப்படுகிறார். கடவுளைக் காணாததால் அந்தப் பேரொளி காட்டும் திசையில் செல்லாததால்; கண்டது துன்பமே!

சைத்தானுக்குப் பணி செய்தால் துன்பந்தவிர வேறு என்ன பயன்? கடவுள் ஒளி வழி எது செயினும் இன்பமாக அமையும். ஆணவத்தின் திசைவழி நன்றே செயினும் துன்பமேயாம். ஏன்? வழிகாட்டுதலில் உயிர்கள் நன்று நினைத்தல் இயலாது; நன்று செய்ய இயலாது. ஒரோவழி செய்யப்படுவன நன்மை போலத் தோன்றும். ஆயினும் நன்மையல்ல. உலை நீரில் கிடக்கும் ஆமைக்கு இளஞ்சூடு தரும் இதமான இன்பம் யாது செய்யும்? நன்மை போலக் காட்டித் துன்பம் செய்யும்!

மாணிக்கவாசகர் அனுபவம் வேறு! மற்றவர் அனுபவம் வேறு! இறைவனைக் காண – அனுபவிக்கப் பலர் முயற்சி செய்தனர்; முயன்று கொண்டுள்ளனர். ஆனால், கண்டவர் சிலரே! ஆன்மாவின் அறிவு, சிற்றறிவு! மறத்திக்குள்ளாகும் அறிவு, பாசபந்தங்களுக்கும் ஆசாபாசங்களுக்கும் இரையாகும் அறிவு. இந்த அறிவால் தூய்மையே அறிவே வடிவாக உள்ள கடவுளை எப்படிக் காணமுடியும்? நான்முகனும் திருமாலும் தேடிக் காணமுடியாத பொருள், கடவுள் என்ற வரலாறு கற்றுத் தரும் படிப்பினை என்ன? கடவுள் கருணை பாலித்தாலன்றிக் கடவுளைக் காணஇயலாது. மாணிக்கவாசகருக்கு, இறைவன் ஞானாசிரியனாக எழுந்தருளி உபதேசித்தருளினான்; காட்சி தந்தான். "வருக" என்று அழைத்தான். ஆனால், அழைத்துக்கொண்டு போகாமல் இறைவன் மறைந்துவிட்டான்! ஏன்? மாணிக்கவாசகரின் அன்பு பெருகி வளர்தல் வேண்டும். அந்த அன்பைத் துய்க்க வேண்டும் என்ற திருவுள்ளம்தான்! கடவுள் மாணிக்கவாசகருக்கு மறைந்தான். புணர்ச்சி, அன்பை வளர்க்காது! பிரிவுதான் அன்பை வளர்க்கும். மாணிக்கவாசகர் கடவுளைக் கண்டார்; அனுபவித்தார். கடவுள் பிரிந்து போனார். மாணிக்கவாசகர் கடவுளிடம் கொண்ட பிரிவு, திருவாசகத்தைத் தந்தது.

கடவுள் ஒருவனே! வணங்குவனவெல்லாம் கடவுள் அல்ல! கடவுள் பல இல்லை. கடவுள் பல என்ற கொள்கை ஏற்புடையதுமன்று. வானிலுள்ள தேவர்க்கு எல்லாம் கடவுள் ஒருவனே! அமரர்களுக்கு எல்லாம் ஒருவனாக, தேவர்கோ அறியாத தேவதேவனாக விளங்கும் கடவுள் வலியவந்து, "வா"வென்று அழைத்து வான்கருணை பொழிந்த பிறகும் உடன் போகாது பின்நின்று போனதை நினைந்து நினைந்து வருந்துகின்றார்! ஒன்றை அனுபவிக்காமலே இருந்துவிடலாம்!

அனுபவித்துப் பின் இழத்தல் கொடிய துன்பத்தைத் தரும். மாணிக்கவாசகர் இறைவனைக் கண்டார். அந்தம் ஒன்றில்லா ஆனந்தத்தைப் பெற்றார்; அனுபவித்தார். இடையில் பிரிவு ஏற்பட்டுவிட்டது. ஆனந்த அனுபவத்தில் இடையீடு பட்டுவிட்டது. இதனை மாணிக்கவாசகர் ஆற்றிக்கொள்ள இயலாமல் தவிக்கிறார். கடவுளின் பிரிவுத் துன்பத்தைத் தாங்கிக் கொள்ளும் ஆற்றலில்லாமல் அல்லற்படுகிறார். இந்த ஆற்றாமையால் தற்கொலை எண்ணம்கூட மாணிக்கவாசகருக்கு வருகிறது! "திண்வரை உருள்கிலேன்; தீயில் புக்கிலேன்!" "சாகேன்" என்றெல்லாம் அலமருகிறார்; புலம்புகிறார். மீண்டும் உண்ணவே ஆசைப்படுகிறார். பசியும் உண்ணுதலும் சுழன்று வரும் தீய வட்டமாயிற்றே! எத்தனை தடவை உண்டாலும் பசி என்று நீங்கும்! ஒருபோதும் நீங்காது! ஞானம் பெற்றால் ஒழிய உடற்பசி தணிய வழியில்லை! பிறப்பு தொடங்கிய நாள் தொட்டு உண்ட உணவுக்கு அளவில்லை! கடவுளே! இறைவா! அருள்செய்க! வருக என்றருள் செய்க! வெறுமனே செத்துப்போகும்படி விட்டு விடாதே! உன்னால் ஆட்கொள்ளப்பட்ட நான் வெறுமனே செத்துப்போனால் சிரிப்பார்கள்! இந்த அவலம் வேண்டாம்! வேண்டவே வேண்டாம்! உன் பணி செய்ய வருக என்றருள் செய்க! திருப்பெருந்துறை சிவனே அருள் செய்க! என்று உருகுகின்றார் மாணிக்கவாசகர்.

*இருகை யானையை ஒத்திருந்(து) என்உளக்*
*கருணை யான் கண்டி லேன்கண்ட(து) என்னமே*
*"வருக" என்று பணித்தனை வானுளோர்க்(கு)*
*ஒருவ னேகிற்றி லேன்கிற்பன் உண்ணவே!*

(திருச்சதகம் - 41)

மக்கள் வாழ்வின் அனைத்துத் துறைகளையும் இன்று இறுக்கிக் கொண்டுள்ள அதிகாரச் செல்வாக்கு, பணச்செல்வாக்கு ஆகியவற்றின் பிடி விடுபட்டு , எல்லோருக்கும் எல்லாம் என்ற கொள்கை வழியில் ஆட்சி அமைவதற்குரிய எல்லா முயற்சிகளிலும் மக்கள் ஈடுபடவேண்டும்.

-அருள்நெறித்தந்தை

# அருள்தரு சண்முகநாதன் திருக்கோயில் திருக்குட நன்னீராட்டுப் பெருவிழா

## திருப்பணிகள் - 2014

அருள்மிகு சண்முகநாதப் பெருமான் திருக்கோயில் திருப்பணிகளுக்கு இளங்கோயில் நிர்மாணம் (பாலாலயம்) 13.12.2009 அன்று செய்யப்பெற்றது. அன்று தொடங்கப்பெற்ற பாலாலயப் பணிகளைத் தொடர்ந்து முழுமையாக திருக்கோயில் புதுப்பிக்கப்பெற்று நிறைவான திருப்பணிகள் நடைபெற்று அருள்மிகு சண்முகநாதப் பெருமான் திருக்கோயில் எழிலும், பொலிவும் பெற்று அருள் ஓலக்கத்துடன் காட்சி தருகின்றது.

மலைக்கோயில் மேல்பகுதியில் இருந்து கீழ்ப்பகுதி வரை புதிய 11 (பதினொரு) ஆர்.சி.சி கொன்கிரீட் மண்டபங்கள் எழுப்பப்பெற்றுள்ளன. திருக்கோயில் முன் நுழைவாயில் அலங்கார வளைவு முற்றிலும் புதுப்பிக்கப்பெற்று எழிலுறு வண்ணங்களால் பொலிவு பெற்று மின் வண்ணவிளக்குகள் ஒளி ஏற்றப்பெற்று அழகுடன் காட்சி தருகின்றது. தோகையடி விநாயகர் விமானம் அற்புதமாய் காட்சி தருகின்றது. தோகையடி விநாயகர் மண்டபத்தின் மேல்தளம் முழுவதும் புதிய தட்டோடுகள் பதிக்கப்பெற்று மண்டபம் பலப்படுத்தப்பட்டுள்ளது.

நுழைவாயில் அலங்கார வளைவு தொடங்கி திருக்கோயில் திருஷ்டி சுற்றி மண்டபம் வரை விசாலமாய் உயரமாக பக்தர்களைக் குளிர்விக்கும் வகையில் பெரிய தகரக் கொட்டகை முழுமையாய் புதுப்பிக்கப் பெற்றுள்ளது. புதிய நவீன அதிதொழில் நுட்பத்துடன் கூடிய வெப்பத்தை வெளிப்படுத்தாத குளிர்ச்சியைத் தரும் புதிய நிழற்கூரை வேயப் பெற்றுள்ளது. புதிய தகரக் கொட்டகைக் கூடத்தில் தாங்கும் உருளைகள் எல்லாம் புதுப்பிக்கப்பெற்றுள்ளன. புதிய வண்ணப்பூச்சுடன் கம்பீரமாய் தகரக் கொட்டகை காட்சி தருகின்றது. கண்காணிப்பு கேமராக்கள் பொருத்தப்பெற்றுள்ளது. புதிய அலுவலக அறையும், பாதுகாக்கப்பட்ட குடிநீர் வசதியுடன் கூடிய அருமையான நவீன அன்னதானக்கூடமும் (ஆர்.சி.சி கான்கிரீட் கட்டிடம்) அமைக்கப்பெற்றுள்ளது. வந்தாரை வரவேற்று வாழ்த்தும் சுப்புலட்சுமி (திருக்கோயில் யானை) உறைவிடம் புதுப்பிக்கப்பெற்று அதி நவீன வெப்பம் தாங்கக் கூடிய மேற்கூரை அமைக்கப் பெற்றுள்ளது.

திருஷ்டிசுற்றி மண்டபத்தில் திருக்கோயில் நுழைவு வாயிலுக்கு இடையில் இருக்கின்ற மலைப்பாதையில் மலையின் தொடக்கப் பகுதியில் புதிதாக வானளாவிய புதிய மண்டபம் எழுப்பப் பெற்றுள்ளது. அந்த மண்டபத்தில் அருள் ஓலக்கம் தரும் அற்புத ஓவியங்கள் தீட்டப்பெற்றுள்ளன.

அருள்நெறித் தந்தை குருமகாசன்னிதானம் அருள்தரு சண்முகநாதப் பெருமான் வைகாசி விசாகவிழாவில் திருமடத்திற்கு எழுந்தருளும் கொலுமண்டபத்தில் பெருமானுக்கு சுற்றிலும் தண்ணீர் தெப்பம் கட்டுவது வழக்கம். அதற்குத் தண்ணீர் இன்றி வறட்சி நிலவிய பொழுது சண்முகநாதப் பெருமானை எண்ணிப் பிரார்த்தித்து கண்ணீர் சொரிந்தார்கள். என்னே! பெருமான் பெருங்கருணை! எங்கிருந்தோ மேகங்கள் திரண்டுவந்தன! அறிய இயலவில்லை. பெருமழை பொழிந்து குளங்கள் நிரம்பின! அருள்தரு சண்முகநாதப் பெருமான் கொலுமண்டபத்தில் தெப்பக்குளம் திருச்சுற்றில் எழுந்து அருள்பாலித்தார். இந்த அருள்காட்சி திருக்கோயில் நுழைவு மண்டபத்தில் அருள் ஓவியமாய்த் தீட்டப்பெற்றுள்ளது.

புதிய ஜெனரேட்டர் வாங்கப் பெற்று அதற்கெனப் புதிய மண்டபம் அமைக்கப்பெற்றுள்ளது. புதிய மழை நீர் வடிகால்கள் திருக்கோயில் மேல்தளத்திலிருந்து எல்லா பகுதிகளிலும் சிறப்பாக நீர் ஆதாரத்தை சேமிக்கும் வகையில் அமைக்கப் பெற்றுள்ளன. திருக்கோயில் மேல்தளம், மண்டபங்கள், கீழ்க்கோயில் என்று எல்லாப் பகுதிகளிலும் பெய்யும் மழைநீர் வீணாகாமல், மாசுபடாமல், தூய்மையோடு பாதுகாக்கப்படக் கூடிய பெரிய மூடிய புதிய வடிகால்கள் அமைக்கப்பெற்று சரவணப்பொய்கை தீர்த்தத்திற்கு மக்கள் பயன்படுத்தும் புனித தீர்த்தமாக மாசுபடாமல் கொண்டு சேர்க்கும் வகையில் அமைக்கப் பெற்றுள்ளன.

திருக்கோயில் கார்த்திகை விநாயகர் விமானம் புதுப்பிக்கப்பெற்று கார்த்திகை விநாயகர் மண்டபத்தின் மேல்தளம் புதுப்பிக்கப்பெற்று புதிய தட்டோடுகள் பதிக்கப்பெற்றுள்ளன. கார்த்திகை விநாயகர் விமானம் புதுப்பிக்கப்பெற்று வண்ணத்தால் பொலிவு பெற்று விளங்குகின்றது. தோகையடி விநாயகர் அருகில் புதிய மண்டபம் எழிலுறு வண்ணத்தில் அமைக்கப்பெற்றுள்ளது.

புதிய பாதையில் புதிய எழிலுறு நுழைவாயில் (அலங்கார வளைவு) அமைக்கப் பெற்றுள்ளது. எழில் வண்ணம் தீட்டப் பெற்று புதிய பாதை முழுதும் மலை ஏறும் வரை அழகிய மண்டபம் அற்புத வண்ணத்துடன் பக்தர்கள் வசதிக்காக அமைக்கப்பெற்றுள்ளது! புதிய பாதை எழிலுறு அலங்கார வளைவு, புதிய மண்டபத்துடன் பக்தர்கள் வசதிக்காக முழுநேரமும் திறந்து விடப்பெற்றுள்ளது.

திருக்கோயில் மலைமேல் நுழைவுவாயில் தொடங்கி புதிய பாதை உள்பட மலைக்கோயில் மேல் பகுதி முழுவதும் புதிய 11 (பதினொரு) ஆர்.சி.சி கான்கிரீட் மண்டபங்கள் எழிலுறு வண்ணத்துடனும் பொலிவுடனும் அமைக்கப்பெற்றுள்ளன. மலைத் திருக்கோயில் தகரக்கொட்டகை நுழைவாயில் தொடங்கி மலைத் திருக்கோயில் மேலே அருள்மிகு சண்முகநாதப் பெருமானை தரிசிக்கும் சன்னிதி வரை மழை, வெய்யில் பாதிப்பின்றி தரிசனம் செய்யவும் பக்தர்கள் வசதியாக சென்று திரும்பும் வகையிலும் மண்டபங்கள் அமைக்கப் பெற்றுள்ளன.

மேல்திருக்கோயில் கீழ்த்திருக்கோயில் புதிதாக மின்வயரிங் செய்யப்பெற்று புதிய ஜெனரேட்டர் அமைக்கப்பெற்றுள்ளது.
திருக்கோயில் கல் மண்டபங்கள் திருக்கோயில் மேல்மண்டபங்கள் மற்றும் திருநாள் மண்டபங்களின் தூண்களில் பூசப்பெற்றிருந்த சுண்ணாம்புக் காரைகள் முற்றிலும் நீக்கப்பெற்று தூண்களுக்கு எம்.ஆர்.எப். பாதுகாப்பு எண்ணெய் பூசப்பெற்றுள்ளது. திருக்கோயில், கீழ்த்திருக்கோயில், திருநாள் மண்டபம் முற்றிலும் அழகிய வண்ண மின்விளக்குகள் அமைக்கப்பெற்றுள்ளன. தேவையான பகுதிகளில் மக்கள் அமருவதற்காக கிரானைட் தளம் அமைக்கப்பெற்றுள்ளது.

புதிய கொடிமரம் அமைக்கப்பெற்று புனிதப் பொலிவுடன் விளங்குகின்றது. மலை ஏறும் பக்தர்கள் வசதிக்காக, ஏற இயலாத முதியோர் எளிதாக ஏறிச்செல்ல மலையின் கீழ்ப்பகுதியில் இருந்து மேல்பகுதி வரை ஸ்டெயின்லெஸ் ஸ்டீல் கைப்பிடிகள் அமைக்கப்பெற்றும், அமர்ந்து இளைப்பாறிச் செல்லும் வகையில் ஆங்காங்கு பெஞ்சுகளும் அமைக்கப்பெற்றுள்ளன.

திருக்கோயில் முழுவதும் கல்மண்டபங்களில் உள்ள சுண்ணாம்புக் காரைகள் நீக்கப்பெற்றும் ஆர்.சி.சி. மண்டபங்களின் மேல்பகுதி சுற்றுச்சுவர்கள் எழிலுறு வண்ணங்களால் பூசப்பெற்றும் உள்ளது. கொடிமரம் முதல் மயில் மண்டபம் வரை பக்தர்கள்

ஒருவருக்கொருவர் மறைக்காமல் இடையூறின்றித் தெளிவாக முருகப்பெருமானைத் தரிசிக்கும் வண்ணம் நடைமேடை பாதுகாப்பு கம்பியோடு அமைக்கப்பெற்றுள்ளது.

நால்வர் சன்னிதி வண்ணப்பூச்சுடன் பொலிவு பெற்றுள்ளது. மயில்மண்டபம் புதிய ஸ்டெயின்லெஸ் ஸ்டீல் கம்பிகளால் சுற்றிலும் அடைக்கப்பட்டுப் பாதுகாப்புடனும், அழகுடனும் விளங்குகின்றது. அர்த்தமண்டபம் அழகுபடுத்தப்பட்டுள்ளது. சுற்றிலும் உள்ள சன்னிதிகள் புதுப்பிக்கப்பெற்றுப் பொலிவுடன் விளங்குகின்றன.

சுற்றுச்சன்னிதிகள் தெட்சிணாமூர்த்தி, குழந்தைவடிவேலர், நடராசர், பைரவர் சன்னிதிகளின் மேல்புறம், மற்றும் கதவுகள் வண்ணம் பூசப்பெற்று பொலிவுடன் விளங்குகின்றன. மலைக்கோயில் மேல்தளம் முழுவதும் தட்டோடுகள் பதிக்கப் பெற்றுள்ளன. திருக்கோயிலின் மேல்தளத்தில் ராஜகோபுரம், மூலவர் கோபுரம், உற்சவர் கோபுரம், நடராசர் விமானம், சண்டீசர் விமானம் ஆகியவை சீர்செய்யப்பெற்று எழிலுறு அருள் ஓலக்கம் எழுப்பும் அற்புத வண்ணம் பூசப்பெற்று புனிதப் பொலிவுடன் அழகுற விளங்குகின்றது. மெர்க்குரி விளக்குக் கம்பங்கள் வண்ணங்கள் பூசப்பெற்று வனப்புடன் விளங்குகின்றன.

கொடிமரம் எதிரே கந்தசஷ்டி கவசம் சலவைக்கல்லில் வடிக்கப்பெற்று பதிக்கப்பெற்றுள்ளது. டிக்கெட் கவுண்டர் ஸ்டெயின்லெஸ் ஸ்டீலினால் ஆன பாதுகாப்பு சுவர் கொண்டு புதுப்பிக்கப்பெற்றுள்ளது. சண்முகநாதப்பெருமானை கொடிமரம் சுற்றி வணங்கி வழிபாடு செய்து விட்டு வரும் வெளிவாயிலில் புதிய மண்டபம் அமைக்கப்பெற்றுள்ளது. பெரிய மருதுவின் பிளவை நோய் தீர்த்த நிகழ்வு அருள் ஓவியமாய் தீட்டப்பெற்றுள்ளது. மடப்பள்ளி (சுவாமிக்கு நைவேத்திய இன்னமுது தயாரிக்கும் இடம்) மற்றும் பரிவட்ட அறை பழுது பார்க்கப்பெற்றுள்ளன. திருநாள் மண்டபம் தொன்மை மாறாமல் புனிதப் பொலிவுடன் அழகுற விளங்குகின்றது.

பக்தர்கள் வசதிக்காக திருக்கோயில் முழுவதும் கண்காணிப்புக் கேமராக்கள் பொருத்தப்பட்டுள்ளன. பக்தர்களுக்குப் பாதுகாக்கப்பட்ட தூய்மையானகுடிநீர் வழங்க இயந்திரம் பொருத்தப்பட்டுள்ளது. பாதுகாக்கப்பட்ட குடிநீர் வசதியுடன் அன்னதானக்கூடம் அமைக்கப்பெற்று பக்தர்களுக்கு அன்னதானம் வழங்கப்படுகிறது. சுற்றுப்புறச் சூழலை மேம்படுத்த, பக்தர்கள் வசதிக்காக இளைப்பாறிச் செல்லும் வகையில்

கீழரத வீதியில் காவல்நிலையம் எதிரே அழகிய பூங்கா 100 மீட்டர் தூரத்திற்கு அமைக்கப்பெற்றுள்ளது. பக்தர்கள் வசதிக்கென சிமெண்ட் இருக்கை அமைக்கப்பட்டுள்ளன. பக்தர்கள் வசதிக்காக ஆடவர், மகளிருக்கெனத் தனித்தனியே நவீன கழிப்பறைச் கூடங்கள் அமைக்கப்பெற்றுள்ளன.

வெள்ளிரதம் சீர்செய்யப்பெற்று புதிய பொலிவுடன் திருவீதிஉலா வருகின்றது. திருத்தேர்கள் அனைத்தும் இரும்பு அச்சு சக்கரங்கள் புதிதாகப் பொருத்தப்பட்டுள்ளன. தேர் அலங்காரச் சீலைகள் புதிதாகச் செய்யப்பட்டுள்ளன. மழை வெயிலால் பாதிப்புகள் ஏற்படாதவாறு தேர்த் தகரக்கொட்டகை அமைக்கப் பெற்றுள்ளன.

பக்தர்கள் முடி காணிக்கை செலுத்துமிடமான முடிமண்டபம் புதிதாக ஆர்.சி.சி கான்கிரீட் மண்டபமாக அமைக்கப்பெற்றுள்ளது.

குன்றக்குடி வந்து குமரன் அருள் பெற்றுச் செல்லும் வகையில் அருள்நெறித் தந்தை குருமகாசந்நிதானம் மணிவிழா நினைவாக திருப்புத்தூர் - குன்றக்குடி சாலையில் குன்றக்குடி ஊர் நுழைவு வாயிலில் அமைந்துள்ள மருதுபாண்டியர் வளைவும் காரைக்குடி - குன்றக்குடி சாலையில் உள்ள குன்றக்குடி ஊர் நுழைவு வாயிலில் அமைந்துள்ள காடன் செட்டியார் வளைவும் பழுது நீக்கப்பெற்று எழிலுறு வண்ணத்துடன்,

காலம் அறிந்து
கருணைபுரியும்
குன்றக்குடிக் குமரக் கடவுளை வழிபட அனைவரையும் வரவேற்றுக் கொண்டிருக்கிறன.

வண்ணமயில் ஏறும் வடிவேலா!
எண்ணமெலாம் எனையாளும் திருமுருகா!
வண்ணங்களால்,
எண்ணங்களால்,
உணர்வுகளால்,
உயிர் அன்பால் எழுப்பப்பெற்ற இத்திருப்பணிகளையும்,
எமையும் உமக்கே
காணிக்கை ஆக்குகின்றோம்.

இத்திருப்பணிகள் நிறைவெய்தி 16.03.2014 இல் திருக்குட நன்னீராட்டு விழாத் தொடங்கியது. மிகப்பெரிய யாகசாலை 33 குண்டங்கள் அமைத்து, சிறப்பாக யாகபூசை நடைபெற்றது. 16.3.2014, 17.3.2014, 18.3.2014 மூன்று நாள்களிலும் சமய இலக்கிய இசைவிழாக்கள் நடந்தன. இவ்விழாக்களில் தமிழ்நாட்டின் தலைசிறந்த அறிஞர் பெருமக்களும், கலைஞர் பெருமக்களும் பங்குபெற்றனர். 19.3.2014 காலை 9.30 மணி அளவில் திருக்குட நன்னீராட்டுப் பெருவிழா மிகக் சிறப்பாக நடைபெற்றது. எம்பெருமானின் அருளமுதப் பேராறு பொங்கித் ததும்பி எங்கும் பரவுகிறது. அவனருள் வெள்ளத்தில் திளைத்து இருமை நலனும் எய்திடச் சேரவாகும் செகத்தீரே!

## தொகுப்புரை

குன்றக்குடித் திருத்தலம் மூர்த்தி, தலம், தீர்த்தம் மூவகையாலும் சிறந்து விளங்குகிறது. குன்றுதோறாடலில் முந்தியது குன்றக்குடி, முருகன் திருத்தலங்களில் அழகிய தோற்றம் உடையது. அருளிச்செயல்களில் புகழ்பெற்றது; புகழ் நூல்கள் பல பெற்றது; கலைச்சிறப்புடையது.; அன்பர்களை எல்லாம் தன்பால் ஈர்த்து நிற்பது; அருள் கொழிப்பது; இத்திருத்தலத்தில் எழுந்தருளியுள்ள பெருமான் அருளைவாரி வழங்கிக் கொண்டிருக்கிறார். பெருமானை வழிபட்டு அவனருள் பெறுவோமாக.

நாம் அனைவரும் இந்த நாட்டினுடைய சொத்து, ஆதலால் நாட்டைப் பொருளாதாரச் சீரழிவிலிருந்து மீட்க வேண்டும், மேலும் இந்த நாட்டை வளம் கொழிக்கும் நாடாக மாற்ற வேண்டும். இந்தப் பணியைச் செய்து முடிக்கக் கூடிய ஆட்சியை அமைக்க வேண்டும் என்றெல்லாம் - நாள்தோறும் எண்ண வேண்டும். வாக்களிப்பதற்கு முன் ஒருமுறைக்கு மூன்று முறை எண்ண வேண்டும். நம்முடைய இலட்சியமாக உள்ள நாட்டினை அமைக்கக்கூடிய திறனாளர்களுக்கு மட்டுமே வாக்களிக்க வேண்டும்.

-அருள்நெறித்தந்தை

உ

# குன்றாக்குடிப் பதிகம்

(தமிழ்த் தென்றல் திரு.வி.க)

மண்ணோர்களும் விண்ணோர்களும் மகிழத்திரு மலைமேல்
அண்ணா! அறு முகவா! எழுந் தருளும்திருக் கோயில்
கண்ணாறவும் நெஞ்சாறவும் கண்டேதொழ வந்தேன்
தண்ணார்பொழில் குன்றாக்குடித் தமிழா! எனக் கருளே..!

கதிரோன்பொழி ஒளிமேய்ந்திடும் கருணைப்பெரு மலைமேல்
நிதியாளரும் மதியாளரும் நிறையும்திருக் கோயில்
பதியே ! பர மேட்டி ! உனைப் பரிவாய்த் தொழ வந்தேன்
கதியே எனக் குன்றாக்குடிக் கண்ணே ! எனக் கருளே..!

நீலந்தரு வானில்மதி நிலவுந்திய மலை மேல்
சீலந்திரு மயில் மங்கையர் சேர்ந்தே பணி கோயில்
காலன் வினை தொடராவழி காணப்புகுந் தேனால்
கோலம் பெறு குன்றாக்குடிக் குணமே ! எனக் கருளே..!

புறச்சோலையும் அறச்சாலையும் பொலியும் தெரு மலைமேல்
மறச்சார்பினை அறுக்கும் குரு மணியே ! திருக் கோயில்
உறச்சேர்ந்தனன் உளம்கொண்டனன் ஒளிபெற்றிட முருகா!
நிறச்சேல்விழிக் குன்றாக்குடி நிமலா! எனக் கருளே..!

முன்னம் வினை பலவே செய மூர்க்கன்முனைந் திட்டேன்
இன்னம் வினை செயவோ மனம் எழவேயிலை ஈசா !
புன்னெஞ்சினன் முருகா! நினைப் புகலேயெனப்புக்கேன்
மின்னற்கொடிக் குன்றாக்குடி வேலா! எனக் கருளே..!

மலைநோக்கினன் மலையேறினன் மலையாகவே நிற்கச்
சிலைவேடரைச் செற்றுக்கொடிச் சிவவள்ளியைக் கொண்ட
இலைவேலவ! முயன்றேவரும் ஏழைக்கருள் செய்யாய்
அலைவேசெயல் குன்றாக்குடி அன்பா ! நினக் கழகோ..!

கல்லாதவன் பொல்லாதவன் கருணைப்பொருள் வேண்டி
நில்லாதவன் என்றேஎனை நீக்கிப் பெரு மொழியைச்
சொல்லாதிவன் நீத்தாலினிச் சூழப்புக லுண்டோ?
செல்லாருயர் குன்றாக்குடிச் சிவமே! இது அழகோ?

அறுமாமுகம் தோளாறிரண் டழகுத்திரு மார்பும்
உறுகோழியும் மயில்வேலுடன் ஓதும்பிடி மானும்
நறுமாணடி மலரும் விழி நாடற்றெரிந் தருளாய்
புறமேவிடல் குன்றாக்குடிப் பொருளே! நினக் கழகோ..!

சாதிப்பிரி வாலே உயர் சன்மார்க்கமும் தளர
நீதித்துறை வழுவும் கொடு நிலை நேர்ந்துள நேரம்
சோதிப்பெரு மானே! துணை சூழாதிவண் இருத்தல்
ஆதிப்பொருள்! குன்றாக்குடி அரசே ! நினக் கழகோ.!

மயில்மேலொளிர் மணியே! உயர் மலைமேல்திகழ் மருந்தே
உயர்கோயிலின் ஒளியே! உணர்ந் தோதற்கரும் பொருளே..!
துயில் கூர்இருள் துன்பம் கெடத் தொடுவேலவ! வாழி
குயில் கூவுநற் குன்றாக்குடிக் கோனே! சிவ குருவே!

---

விடாமுயற்சி, மிகப்பெரிய லட்சியம், அறிவைத் தேடிச்சென்று கற்றல்,
தோல்வியைக் கண்டு துவளாமை, தன்னம்பிக்கை போன்றவற்றை
உள்ளடக்கிக் கொண்டால் யாராக இருந்தாலும்
சாதனை படைக்க முடியும்.

**- ஏ.பி.ஜே. அப்துல்கலாம்**

சக மனிதனை நேசிக்காத படிப்போ, பணமோ, புகழோ, அவமானத்துக்கு உரியது. மாற்றத்தை ஒவ்வொருவரும் அவரவரிடத்திலிருந்து தொடங்குவோம்.
அறுவடை தருகிற பயிர்களைப் போல, நம் குழந்தைகளை வளர்க்க வேண்டாம். அவர்களை அறம் போற்றுகிற உயிர்களாக வளர்ப்போம்.

**- உயிர்நாரில் தொடுத்த மாலை**

உ





குன்றக்குடி

## அருள்தரு சண்முகநாதப்பெருமான் திருக்கோயில்

## பங்குனி உத்தரப் பெருந்திருவிழா

**முக்கிய நிகழ்ச்சிகள்**

| | |
|---|---|
| 4.4.2014 வெள்ளி | கொடியேற்றம் |
| 8.4.2014 செவ்வாய் | 5 ஆம் திருநாள் (திருக்கல்யாணம்) |
| 10.4.2014 வியாழன் | 7 ஆம் திருநாள் (தங்கரதம்) |
| 11.4.2014 வெள்ளி | 8 ஆம் திருநாள் (வெள்ளிரதம்) |
| 12.4.2014 சனி | 9 ஆம் திருநாள் (திருத்தேர்) |
| | பிற்பகல் 3.30 மணிக்கு வடம் பிடித்தல் |
| 13.4.2014 ஞாயிறு | பங்குனி உத்திரம் (அக்கினிக்காவடி) |

திருக்குட நன்னீராட்டுப் பெருவிழாவைத் தொடர்ந்து
அருள்தரு சண்முகநாதப் பெருமானுக்கு
**3.5.2014 சனிக்கிழமைக் காலை**
**மண்டலாபிஷேகம் நடைபெறும்.**

குன்றக்குடி வருக! குமரன் அருள்பெறுக!

தனி மனிதன் சுத்தமானால், வீடு சுத்தமாகும்.
வீடு சுத்தமானால், வீதி சுத்தமாகும்.
வீதியின் தூய்மை, ஊரின் தூய்மை.
தவறு செய்கிற பெற்றோர், போதிக்கிற தகுதியை இழக்கிறார்கள்.
எனவே, வீட்டின் ஒழுக்கம்தான் நாட்டின் ஒழுக்கம்.

**- பொன்னம்பல அடிகளார்**

# உலக மெய்யியலும் திருக்குறள் மெய்யியலும் - தொடர்

## 25. தமிழர் மெய்யியல் - திருக்குறள் மெய்யியல்

(தமிழாகரர்.சித்தாந்த நன்மணி. முனைவர். கா. அரங்கசாமி)

**முன்னுரை :**

இதுவரை பல்வேறுபட்ட மெய்யியல் கோட்பாடுகளைக் கண்டோம். இங்கு திருக்குறள் மெய்யியல் என்ன என்பதைக் காணும்முன் சில செய்திகளைக் காணவேண்டும். மேலைநாட்டு மெய்யியல் வெறும் ஆரவாரச் சொற்சிலம்பம் என்பது முன்னர்க் கூறப்பட்டது. மேலைநாட்டு மெய்யியல் இன்று பல பல்கலைக்கழகங்களில் பயிலும் நிலை உள்ளன. ஆனால் அந்த மெய்யியலைப் படித்தவர்கள் மெய்யியல் அறிஞர்களாக விளங்குவதில்லை. சீனப் பேரறிஞன் கன்பூசியசு "கல்வி என்றாலே அது மெய்யியல் கல்விதான்" என்றான். அதனை நோக்கின் மேலைநாட்டு மெய்யியல் கல்வி எவ்வளவு தாழ்ந்தது என்பது விளங்கும். அதன் தன்மைகளை இன்றைய நடைமுறை உலகம் வெளிக்காட்டும். "நல்லது போற்றாத, பண்புகளைப் போற்றாத அறம் போற்றாத மேலை நாட்டு மெய்யியல் தரும் பயன் ஏதும் இல்லை". ஆங்கு நுகர்வு வேட்கை, இழிந்த செயல்கள், காமச் செயல்கள், பல்கிப் பெருகி வருவதால் அதனை மெய்யியல் என்று போற்றுவது கடினம். அவர்கள் மக்கள் நலனைவிட வணிக நலத்தையே (பணப்பித்தர்கள்) அதிகம் பார்க்கும் செயல்களில் ஈடுபடுகின்றனர். அவர்களின் மெய்யியல் "எபிக்கூரியன்" கூறுவதை ஒத்துத் தாழ்ந்த உலக வாழ்க்கையைப் போற்றுவதாகவே அமையக் காண்கின்றோம். பிற உயர்ந்த மெய்யியல் கோட்பாடுகள் அங்குத் தோற்றம் பெற்றாலும் மக்களை (மன்பதையினை) உயர்த்தும் செயல் இல்லை. எனவே மேலைநாட்டு மெய்யியல் அறவோர் போற்றும் நிலையில் இல்லை என்பதையும் அறிதல் வேண்டும்.

**வேத இந்து மெய்யியல் :**

வேத இந்து மெய்யியலும் மேலைநாட்டு மெய்யியலைப் போன்று தாழ்ந்த உணர்வுகட்கு இடம் தந்து சென்றதை முன்னர்க் கண்டோம். "இந்து அறவியல்" என்னும் நூலின்வழி "ரிக் முதல் பகவத் கீதை" வரை உயர்ந்த பண்பாடு, ஒழுக்கம், நாகரிகம், அறம் போற்றும் சிந்தனைகள்

வளர்க்கப்பெறவில்லை என்பதையும், சாதியம், சுரண்டல் மற்றும் இழிந்த சடங்குகள் போன்றவையே சீரிடம் பெற்றுள்ள பாங்கினையும் அறிந்தோம். எனவே வேத இந்து மெய்யியல் "மெய்யியல்" என்று அழைக்கத் தக்க தகுதிக்கே உரியது அன்று எனவும் கண்டோம். உபநிடங்கள் கூட முரண்பாடுகளின் மொத்த உருவம் என்றும் கண்டோம்.

**சீன மெய்யியல் :**

கீழை நாட்டு மெய்யியலில் சீன மெய்யியல் சிறப்பிடம் பெற்றது. ஆயினும் அது பழைமைச் சிறப்பினை இழந்து இன்றைய மேலை நாட்டு மெய்யியலின் ஆதிக்கத்தால் அழிந்து வருவதையும் அறிந்தோம். சீன மெய்யியலில் கன்பூசியானிசம், தாவோயிசம் போன்றவை புகழ் பெற்றவை. பின்னர் வந்த "புத்திசம்" கூடப் பதினெட்டுப் பிரிவுகளாகப் பிரியினும் தம் அடித்தளக் கொள்கையில் மாறவில்லை. ஆயினும் புதிய சீனம் மேலைநாட்டு மெய்யியல் கோட்பாட்டின்வழி வீணர்போயின காட்சியை வரலாறு காட்டும். இன்றைய சீன மக்களின் வாழ்க்கை முற்றிலும் ஆதிக்க வாழ்க்கையாக மாறியதற்கு மேலை நாட்டு மெய்யியலின் தாக்கமே காரணம் என்பதையும் நாம் அறிதல் வேண்டும்.

**தமிழர் மெய்யியல் - அறிவர் மெய்யியல் :**

தமிழர் மெய்யியல் என்னும் அறிவர் மெய்யியல் பற்றி விளக்கமாகக் கண்டோம். அறிவர் மெய்யியலின் அடித்தளம்,

1. பகுத்தறிவு போற்றுவது
2. பண்பு போற்றுவது
3. அறம் போற்றுவது
4. தூய்மை போற்றுவது
5. தமக்கெனத் தனியுலகு படைப்பது
6. விண்ணாற்றல் பெறுவது போன்றவையாகும். அதனைப் பற்றி விளக்கமாகக் கண்டோம். அடுத்து வரும் பகுதிகளில் திருக்குறள் கூறும் மெய்யியல்களையும் காண்போம். திருக்குறள் கூறும் மெய்யியலும் தமிழர் கண்டவையே.

**திருக்குறள் மெய்யியல் :**

திருக்குறள் மெய்யியலின் அடித்தளமாகக் கீழ்க்கண்டவை விளக்கம் பெறுவதைக் காண உள்ளோம்.

1. உலகியல் பார்வை
2. அறவியல் பார்வை
3. மீமாந்தப் பார்வை
4. தெய்வ நிலைப்பார்வை
5. அறிவியல் பார்வை
6. பகுத்தறிவுப் பார்வை
7. இயற்கைப் பார்வை
8. அறிவர் நெறிப் பார்வை
9. கல்விப் பார்வை
10. பண்புப் பார்வை

கொண்டதாக அமையும். இவற்றைப் பற்றி இக்கட்டுரை விளக்கப்போவதில்லை. பின்னர் இவற்றைப் பற்றி விரிவாக ஆய்வோம். திருக்குறள் மெய்யியல் மட்டும்தான் உலகினை உயர்த்த உறுதி பூண்டுள்ளதைக் காண உள்ளோம். எனவே இங்குத் திருக்குறள் மெய்யியல் தோற்றம் பெற்ற களத்தையும், காரணத்தையும் ஆய்ந்து கூறிட உள்ளோம். மேலும் கீழ்க்கண்டவற்றையும் நாம் திருக்குறள் மெய்யியல் காணும் போது காணுதல் வேண்டும்.

1. திருக்குறள் தமிழர் அறிவர் நெறி நின்றது.
2. திருக்குறள் உலகம் போற்றுவது.
3. திருக்குறள் உலக மக்கள் அனைவரும் சமச்சீர் நிலை பெற்று வாழ வழிகாட்டுவது.
4. உலகத்தையே அறம் மட்டுமே ஆளவேண்டும் என்று கூறுவது.
5. உலக மக்கள் அனைவரும் மெய்யியல் அறிய வேண்டும் என்று உரைப்பது.
6. உலகத்தை ஆள நீத்தார் அறவோர் வேண்டும்.
7. உலகத்தை அறிவுடைமை ஆளுதல் வேண்டும்.
8. உலகத்தைப் பண்புடைமை வழி நடத்த வேண்டும்.
9. உலக மக்களின் நலமும் வளமும் சிறக்க வேண்டும்.
10. யாவும் பகுத்தறிவுப் பார்வையுடனும் இயற்கை நெறியுடனும் நடந்திடல் வேண்டும் என்பன போன்றவையே திருக்குறள் மெய்யியல் படைக்க வந்த மாந்த நலவளக் கோட்பாடுகளாகும். எனவே திருக்குறள் மெய்யியல் – விரிவாக ஆராயப்பட வேண்டும் என்பது போதரும்.

**முடிவுரை :**

இந்தக் கட்டுரைக்கு முடிவுரையொன்று வேண்டுவதில்லை. எனினும் வழக்கமாக இந்த முடிவுரை அமையும். ஆய்வு என்பதற்கு எல்லையில்லை என்பதால், மேலும் மேலும் புதிய ஆய்வுகள் வெளிப்படலாம். எனவே முடிந்த முடிவாக எதனையும் கூறுவது இயலாது. ஆயினும் இங்கு கூறப்பட்ட செய்திகளின் அடிப்படையில் நின்று முடிவு கூறுவோம்.

1. மேலை நாட்டு மெய்யியல் சொற்சிலம்பம்

2. வேத இந்து மெய்யியல் பகுத்தறிவு அற்றது.

3. சீன மெய்யியல் புகழ் மிக்கது. ஆனால் இன்று மேலை நாட்டுத் தாக்கத்தால் தன் மதிப்பினை இழந்துள்ளது.

4. தமிழ் அறிவர் மெய்யியல் ஒப்புயர்வற்றது. அடுத்துவரும் திருக்குறள் மெய்யியல் உலகு போற்றும் ஒப்பற்றது என்பதையும் காண உள்ளோம். இன்றைய தமிழன் தாழ்ந்து ஒடுங்கி உள்ளதால் அவனது கடந்தகாலச் சிந்தனைகளும் தாழ்ந்தவை ஒடுங்கியவை என்று எண்ண வேண்டுவதில்லை என்றும் புகழ் மேம்பட்ட ஓரினம் உண்டு எனில் அது தமிழினமே என்பதைத் திருக்குறள் மெய்யியல் எடுத்துக் கூறும் என்பதையும் நாம் மறத்தல் கூடாது.

---

# குன்றக்குடி அருள்தரு சண்முகநாதப் பெருமான் திருக்கோயில் திருக்குட நீராட்டுவிழா படங்கள்



அதிகாலை ஒளியில் அருள் ஒளி பெருக்கும் குன்றக்குடி



இறைமை எழுந்தருளியிருக்கும் யாகசாலை



திருக்குட நன்னீராட்டுப் பெருவிழாக் காட்சி



சமயவிழாக் கருத்தரங்கு தலைமை : திரு. வெ. இறையன்பு இ.ஆ. ப.
அவர்களின் இனிய உரை



அருள் வெள்ளமாய் புறப்படும் புனித நீர்கடங்கள்
புறப்படும் புனிதக் காட்சி



ஓதுவாமூர்த்திகள் திருமுறை விண்ணப்பித்தல்



இசை வேள்வியாய்ப் புறப்படும் 108 நாதஸ்வர, தவில் இசைக் கலைஞர்களின் அருளிசை ஊர்வலம்



ஆன்மீகச் சங்கமம்



ஐம்பெரும் கடவுளர் புறப்பாடு



அருள் ஓலக்கம் எழுப்பும் அருள்தரு சண்முகநாதன்



விழாவில் முத்தமிழ்வேள் ஏ.சி. தம்பதியருடன்
அறமனச் செம்மல் ஏ.ஆர். இராமசாமி தம்பதியர்



கடங்கள் எழுந்தருளும் புனித நிகழ்வு



45 வது குருமகாசந்நிதானத்தின் பிரார்த்தனையில் மழை பொழிந்து வளம் பெருகிய அருள் நிகழ்வு – ஓவியக் காட்சி



மருதுபாண்டியர் பிளவை நோய் தீர்த்த பெரு நிகழ்வு – ஓவியக்காட்சி



அருள் ஓலக்கம் எழுப்பும் அருள்தரு சண்முகநாதன்- ஓவியக்காட்சி



ஞான ஒளிவிளக்கின் அருளாலயம் ஒளி வெள்ளத்தில் மிளிரும் காட்சி

# திருஞானசம்பந்தர் அருளிய திருப்பாசுரத்தில் தருக்கநூல் கருத்து அமைவுகள்

(தருமையாதீனப் புலவர்.வித்துவான். தா. குருசாமி தேசிகர்)

பாண்டிய மன்னன் வெப்பு நோயால் வாடியபோது அந்நோய் தீர்க்க, அரசன் அனுமதி பெற்று அரசி மங்கையர்க்கரசியாரும், குலச்சிறையாரும் ஞானசம்பந்தரை, அழைத்தபோது "ஆலவாயண்ணல் திருவுளம் அறிவேன்" என்று கோயில் சென்று, நோக்கிடவும் விதியிலாதாரை நோக்கி "யான்வாது செய்யத் தீக்கனல் மேனியானே! திருவுள்ளமோ?" என்று வினவிப் பிரார்த்தனை செய்தும், தெளிவு பெறாமையால் மற்றொரு முறையும், திருக்கோயில் சென்று "வேதவேள்வி" பதிகம் பாடித் திருவுள்ளம் அறிந்தே, அரசமாளிகை சேர்ந்து வெப்பு நோய் அகற்றினார். மேலும் அனல்வாதம், புனல்வாதத்தில் வென்று, "சைவசமயமே சமயம்" என்று சமய ஸ்தாபனம் செய்தார்". என்று அமண்மாசு போக்கிய, ஆளுடைப்பிள்ளை, "பிள்ளைப் பருவம்" விடுத்து முதிய கோலத்தில், வந்தாற்போன்று, இன்று தருமையில் வழி விழி இரண்டுங்காட்டி, அருள்வழி புரந்து, குருவருள் நல்கும், திருவாமூர் கொண்ட நங்குருமூர்த்திகள் வாது செய்த வாரணத்தின் வாது செய்த சம்பவத்தில், ஒரு பகுதியை மூன்றாந்திருமுறை "ஆசியுரையில் அருளிச் செய்வார்கள்" அது பற்றிய சிந்தனைத் தொகுப்பு இவை,

**வாது பற்றிய குறிப்பு :**

திருஞானசம்பந்தர் பதிகங்கள் முற்றிலும் பெருமானின் புகழ் சேர்ப்பனவே. வாது செயத் திருவுள்ளமே என்ற வினாவின் தொடர்பு, திருப்பாசுரத்தில் விடையாக அமைகிறது எனலாம். "வாதம்" பற்றிய நிலைப்பாடு, திருப்பாசுரப்பதிகத்தில் பொலிந்திருப்பதை, சேக்கிழார் அப்பதிகத்தின் "பொருள் நிலையை" நன்கு விவரிப்பார். "வாது செய்து மயங்குமனத்தர்" என அப்பரும் அருளுவார். "தெற்றென தீர்த்தார்" "வாதில் வென்றவர்" என்பார், பாண்டியன் கூற்றாகச் சேக்கிழார், "வாது",என்ற சொல் சொல்லாடலையே குறிக்கும். மணிமேகலை, குண்டலகேசி முதலிய பழந்தமிழ் நூல்களில் வாதமாகிய தருக்கம் காணப்படுகிறது என்றும், அந்நூல்கள் பௌத்த நூல்கள் ஆயினும், அந்நூல்களில் காணப்படும் தருக்கக் கருத்துக்கள் தமிழ் மரபிற்கே உரியன என்று சிவஞான சித்தியார், தருக்க கருத்துக்களைக் கொண்டு

தெளிவுபடுத்துவார் ஆய்வாளர் ஈழத்துப் பேராசிரியர் பி.சோ.கிருஷ்ணராஜா அவர்கள், அவரது ஆய்வு (இந்துக் கலைக்களஞ்சியம் இலங்கைப் பல்கலை வெளியீடு. பக்கம் 92) இலங்கை இந்துக்கலைக் களஞ்சியத்திற்கு அழகு செய்கிறது.

**தருக்கநூல் வரலாறு :**

தருக்கமாகிய "வாதம்" பற்றிய கருத்துக்களை "மணிமேகலை" இந்நூலின் "சமயத்திறம் உரைத்த காதையில்" சாத்தனார் தருக்கம் தொடர்பான, கருத்துக்களைத் தந்துள்ளார். "தின்னாகர்" என்பவர் தந்த நூல் "நியாயப்பிரவேசம்" அதனை ஒட்டியே, சாத்தனார் காவியம், தருக்க சிந்தனையைத் தருகிறது என்ற கருத்தையும் ஆய்வாளர் மறுக்கின்றனர். மணிமேகலை பௌத்த நூலாதலால் "நியாயதரிசன தருக்கநூலை ஓரளவே அணுகியுள்ளது" என்பர். சிவஞானசித்தியாரில், சைவ சித்தாந்த நிலைப்பாட்டிலிருந்து, தருக்கக் கருத்துக்கள் முன் வைக்கப்பட்டுள்ளன. பதினான்கு செய்யுள்கள் அளவைக்கென ஒதுக்கப்பட்ள்ளன.

"அனுமானம் அவினாபாவம்
பேசுறும் ஏதுக்கொண்டு
மறைபொருள் பெறுவதாகும்"

என அனுமானத்தைச் "சித்தியார்" வரையறை செய்யும், ஒருவகையில் மணிமேகலையிற் காணப்படும், தருக்கக் கருத்துக்களின் தொடர்ச்சியாகவே, சித்தியாரின் தருக்கக் கருத்துக்கள் காணப்படுகிறது என்பர்.

**தொடர்ந்த தருக்க நூல்கள் :**

சித்தியாரின் பின்வந்த நூல்களில், தருக்கம் தொடர்பான சிந்தனைகள் காணமுடியவில்லை. சிவாக்கிரயோகிகளின் "சிவநெறிப் பிரகாசத்தின்" மூன்று செய்யுள்களில், தருக்கம் பற்றியுள்ளன. இதன் உரையாசிரியர் "நியாயதரிசனத்தின்" தருக்க முடிவுகளைக் கொண்டே விளக்கம் செய்கிறார். சித்தியார், உரையாளர் அறுவருமே "நியாயதரிசன" வழியிலேயே உரை வழங்கியுள்ளதாகவும், கி.பி.12ஆம் நூற்றாண்டிலிருந்தே சைவத்தில் நியாயதரிசனநூல் செல்வாக்கு, காணப்படுகிறது என்றும் ஆய்வாளர் கருதுவர். "ஷட்தரிசன சமுச்சயத்"தின் ஆசிரியரான ஹரிஹரசூரி (கி.பி.1168) ராஜசேகர சூரி (கி.பி.1348) ஆகிய "நியாய தரிசன" ஆசிரியர்கள்,சைவர்களே என்பர். "நியாயதரிசனத்தை" அனுசரிப்பவர்கள், சைவர்கள் எனவும்

வைசேடிகத்தை அனுசரிப்பவர்கள் பாசுபதர்கள் எனவும் அழைக்கப்பட்டனர் என்பர். விவேக விலாச நியாய நூலின் ஆசிரியரான "ஜினதத்தசூரி" என்பார், நையாயிகமும் (இந்து கலைக்களஞ்சியம் – பக்கம் 92) வைசேடிகமும் சைவமரபில் உள்ளடங்கும் என்றும் கூறுவர்.

ஈழத்து நன்கொடை :

நியாயதரிசனத்தின் தருக்க மரபு "சைவ நூற்"கல்விக்கு உபகாரமாகும் – என்ற நிலைப்பாடு பெருகியபோது, வடமொழித் தருக்க நூல்களின் வரவு பெருகின. கோவர்த்தன மிஸ்ரரின் தர்க்க பாஷைப்பிரகாசிகை, துறைமங்கலம் சிவப்பிரகாச சுவாமிகளால் மொழி பெயர்க்கப்பட்டது. "அன்னம்பட்டரின்" தருக்க சங்கிரகம், சிவஞான சுவாமிகளால் மொழி பெயர்க்கப்பட்டது. யாழ்ப்பாணம், திருஞானசம்பந்தப் பிள்ளையால், "தர்க்காமிர்தம்" வெளியிடப்பட்டது. ஈழத்து நீர்வேலி சங்கரபண்டிதர், இயற்றிய "சைவப் பிரகாசனம்" தருக்கநூற் கல்விக்குரியது 1925-ல் வெளியிடப்பட்டது. சித்தியார் அளவைப்பாடல்கள் ஆதாரமாகக் கொண்டு ந.ரா.முருகவேள் வெளியிட்ட "சிவஞான சித்தியார் தருக்க இயல்விளக்கம்" தருக்கவாதங்களை உள்ளடக்கி விளக்குவனவாகும்.

மேலும் சில தருக்க நூல்கள் :

நாராயண ஐயங்காரின் "அனுமான விளக்கம்" மணிமேகலையின் தருக்கவாத அடிப்படையானது. கவியரசு திரு.கு.நடேசகவுண்டரின் "நியாயக் களஞ்சியம்" நூல் உவமானங்களைத் தருக்க உலகிற்கு வழங்கியுள்ளது. அத்வைத வேதாந்த மரபிற்குரிய தருக்க நூல்களாலான, விருந்திப்பிரபாகரம், விந்துதிரந்நாவலி என்கிற இருநூல்கள் குப்புசாமி ராசாவால், மொழிபெயர்க்கப்பட்டு வெளி வந்துள்ளன. சென்ற நூற்றாண்டின் ஐரோப்பியத் தருக்க, சாத்திர அறிவைத் தமிழிற் தரும் முயற்சிகளில் "ஈழத்துநல்லூர்" சுவாமிஞானப் பிரகாசரின்" முயற்சி முன்னோடி என்பர். இவர் தருக்க சாத்திரச் சுருக்கம் என்னும் நூலை வெளியிட்டார். இந்நூலில், உய்த்தறி அனுமானம், தொகுத்தறி அனுமானம், என்பவற்றை, முறையே காரண அனுமான வகைகள் அதிலேற்படக் கூடிய போலிகள் எனப்பெயரிட்டு, ஆய்ந்துள்ளார் என்பர். 1960-ல் யாழ்ப்பாணம் க. இராமநாதபிள்ளை, மேலைத்தேய தருக்கத்தை, "அளவை விளக்கம்" என்று வெளியிட்டார்.

**"தருக்கம்" - "வாதம்" விளக்கம் :**

இந்திய மரபிற்குரிய "மெய்யியல்" ஆய்வில் வெற்றி பெறுவதைக் கொண்ட சொல்லாடல்களும், கருத்து முரண்பாடுகளும் முக்கிய இடம் பெற்றுள்ளன. ஒரு மெய்யியல், திட்டத்தை, கட்டமைக்க விரும்பும்போது, வாதிடுவோர் தமது நிலைப்பாட்டை நியாயப்படுத்துவதுடன், எதிர்கருத்துக்களையும் எதிர்க் கருத்துடைய சிந்தனை வட்டங்களையும் நிராகரிக்கத்தக்க, வகையில் விவாதிக்கவேண்டியவராகிறார்கள். எவ்வாறாயினும் அவரது நிறுவலும் நிராகரிப்பும் அவ்வற்றிற்கேயுரிய விதிகள் நியமங்கள் என்பவற்றைப் பேணுதல் இன்றியமையாதது என்பர். இவ்விதியின் சம்பவங்களாக திருஞானசம்பந்தரின் திருப்பாசுர விளக்கம் அமைந்துள்ளதை ஒப்பிட்டுக் காணலாம்.

**தறவற்ற அறிவு வாயில்கள் :**

"தவறில்லாத" அறிவைப்பெறும், வாயில்களாக, சைவ மரபினால் ஏற்றுக்கொள்ளப்பட்ட, பிரமாணங்களில், பிரத்தியட்சம், அனுமானம், சுருதி (ஆப்தவாக்கியம்) ஆகிய மூன்றும் மிக முக்கியமானவை. காட்சியினால் பெறப்பட்ட அறிவென்பது அறிவைப்பெற முயலுமொருவனுக்கு (பிரமாதா) நேரடியாகத் தரப்படுவது. சித்தியார், பிரத்தியட்சத்தை, இந்திரியக்காட்சி, மானதக்காட்சி, தன்வேதனைக் காட்சி, யோகக் காட்சி என நான்காக வகைப்படுத்தும், சான்றோரால், அங்கீகரிக்கப்பட்டது. "ஆப்தவாக்கியம்" எனப்படும், சுருதி, காட்சியால் பெறமுடியாமல் சிந்தனையாளர்களால் நிச்சயிக்கப்பட்ட அறிவின் வாயிலே அனுமானமாகும். இவ்வனுமானம், காரியானுமானம் காரணானுமானம், சாமானியானுமானம் என மூன்று வகைப்படும். காரணத்திலிருந்து, காரியத்தை அனுமானித்தல் காரியானுமானம். காரியத்திலிருந்து காரணத்தை அனுமானித்தல் காரணானுமானம். ஏககாலத்தில் நிகழ்வனவாயிருக்கும் இருநிகழ்ச்சிகளில் ஒன்றில் இருந்து மற்றையதை அனுமானித்தல் சாமானியதிருஷ்டம்.

**திருப்பாசுரத்தில் அமைந்த பாங்கு :**

"விமர்சன" முறையில், பகுப்பாய்விற்கான "வாதக்கட்டமைப்பு" ஐந்து அவயங்களைக் கொண்டு, அனுமான வடிவாக இருப்பது, அது அவதானத்தால் பெறப்பட்ட "சான்று"களால் ஆதாரப்படுத்தப்பட்டதும்

ஆகும். இவ்வனுமானம் ஐந்துபடி நிலைகளைக் கொண்டது. அவை ஒவ்வொன்றும், நியாயவாதக் கட்டமைப்பின், வெவ்வேறு பகுதிகளை வெளிப்படுத்தி "முடிவு" ஒன்றைப் பெறத்தக்க வகையில் அமைக்கப்பட்டுள்ளன. இதனையே தத்துவ ஆய்விற்குரிய "ஏற்புடைவடிவமாக" சைவ சித்தாந்தம் தொட்டு இந்துமரபும் அங்கீகரித்துள்ளன. ஐந்து அவயங்களைக் கொண்ட மெய்மை பெறுகை முறையின் வாத வடிவமானது வருமாறு.

1. வாதிப்போனின் நிலைப்பாட்டை வெளிப்படுத்துங் கூற்று
2. சான்றினை எடுத்துக்காட்டல்.
3. வாதத்திற்கு அனுசரணையான உதாரணத்துடன் கூடிய பொதுவிதி.
4. விவாதிப்பதற்கு எடுத்துக்கொண்ட கூற்றைப் பொதுவிதிக்கு உட்படுத்திப் பார்த்தல்.
5. இதனால் முன்மொழியப்பட்ட கருத்து நிறுவப்பட்டதேயெனக் காட்டும் கூற்று. இவை தருக்க அறிஞர் சோ.கிருஷ்ணராஜா குறிப்பாகும்.

**கூட்டமைப்பு ஐந்தும் பொருந்தியவாறு :**

1. "வாழ்க அந்தணர்" என்ற நிலைப்பாட்டாலும்; மன்னனை வாழ்த்தியதாலும் முதற்பாசுரத்தில் சிவபெருமானுக்குரிய, வழிபாடும், அர்ச்சனையும் நிலைபெற்றோங்க வெளிப்படுத்தியதாகும். இதனைச் சமணர்கள் ஏற்காவிட்டாலும், தென்னவன் அறியும் "நிலைப்பாடு" பெற்றமையால், அவன் கொண்டொழுகிய "அயல்நெறி" வீழ்ந்தொழியும் நிலைப்பாடும், "எல்லாம் அரன்பெயர் சூழ்க" என்றதால், "உலகுயிர்கள்"யாவும் "அஞ்செழுத்தோதி" வளர்ந்து வாழ்க என்ற நிலைப்பாடும்" "வையகமும் துயர்தீர்கவே" என்றதால் உயிர்கள் இகபரத்தில், துன்ப நீக்கமும் இன்ப ஆக்கமும் பெற்றிடும் ஆகிய செய்திகளை, ஞானசம்பந்தர் "வாதிப்போனின் நிலைப்பாட்டை முதலில்" வெளிப்படுத்தியமை ஆகும். ஆகவே திருப்பாசுரமுதற்பாடல், தருக்க – வாத நூற்கருத்தில் முன்மொழியும் நிலைப்பாடெனலாம்.

**உ. சான்று காட்டல்**

"அரியகாட்சியர்" "ஆயினும் பெரியவராவர்" ஆரறிவார் பெற்றியே" "வெந்தசாம்பல் விரையெனப்பூசி" "தந்தைதாயிலர்" "தம்மையே சிந்தியா எழுவார் வினைதீர்ப்பர்" "எந்தையார் அவர் எவ்வகையார் கொல்" என்பன போன்ற பாசுர வரிகள், நிலைப்பாடுகட்குச்

சான்று காட்டலில், அமைவு செய்யலாம். விளக்கம் பெரியபுராணத்தில் காணலாம்.

**3. வாதத்திற்கு அனுசரணை எடுத்துக்காட்டுகள் :**

"ஆட்பாலவர்க்கருளுந்திறம்" "யாதும் இறைவன்பால் ஆராய்ச்சி இல்லை" என்பதும், "தாட்பால் வணங்கித் தலைநின்று கேட்க தக்கார்" என்பதும், "ஏதுக்களாலும், எடுத்த மொழியாலும் சோதிக்க வேண்டா" என்பதும், "சுடர்விட்டுளன்" என்பதும், "மாதுக்கம் நீங்கலுறுவிர் மனம் பற்றி வாழ்மின்" என்பதும், "சாதுக்கள் மிக்கீர் இறையே வந்துசார்மின்கள்" என்பதும், வாதத்திற்கு அனுசரணையான அமைவு எனலாம்.

இனி, சண்டீசர் செய்கையும், திருமால், ஈசர் அருளால் ஆழி பெற்றதும், மாலும் அயனும் ஏனைத் தேவர்களும் வாழ, பெருமான் நஞ்சுண்டு இறவாமை காத்த கருணைத்திறங்கள் வாதத்திற்குரிய உதாரணங்களாகும்.

**4. விவாதத்திற்கு எடுத்துக்கொண்ட கூற்றைப் பொதுவிதிக்கு உட்படுத்திப்பார்த்தல் :**

"வேதமுதல்வன்" என்னும், திருப்பாசுரஎட்டாம் பாடல், உலகோர் "இடர்" நீங்கிடவும், முதல்வனை அடையாளமறிந்து வழிபடவும், சிவபுராணம் பதினெட்டு சூதமுனிவர், தொகுத்தளித்து உபகரித்து, கற்கவும், நிற்கவும் பணித்தசெய்திகளை உடையனவாம். இக்கருத்து விவாதப் பொது விதிக்கு உட்படுத்தி, மதி நுட்பம் நூலோடு தொடர்புபடுத்திடும் தன்மையதாய் உள்ளது என்று அமைவு கூறலாம்.

**5. முன்மொழியப்பட்ட கருத்து நிறுவப்பட்டதே எனக்காட்டல் :**

"அற்றன்றி" என்ற திருபாசுரப்பாடலால், ஏடுநீரில் எதிர்த்துச் செல்லின் "ஞானம் ஈசன்பால் அன்பே" என்பதும் எல்லாம் அரன் நாமமே சூழ்க, என்றும் முன்மொழியப்பட்ட கருத்தை பின்னும் வலியுறுத்தி, "பெற்றொன்று உயர்த்த பெருமானே பெருமான்" என்று நிறுவப்பட்டது எனலாம்.

**தருக்க நோக்கம் :**

வாதம் அல்லது தருக்கமுறை பெரும்பாலும் உண்மையைக் கண்டறியும் விருப்புடைய தத்துவாதிகளிடையே நிகழ்வதாகும். இவ்வாதத்தில்

வெற்றி தோல்வி என்பதற்கு இடமில்லை. தவறான கருத்துரைகள் நிராகரிக்கப்பட்டு, சரியானதைக் காணும் "தேடலே" இலக்காகும். வலுவற்ற கருத்துரைகள் வலுவான சான்றுகளின் அடிப்படையிலும் நிராகரிக்கப்படும். சமணர்கள் "வாயிருந்தமிழ் படித்து இருந்தும்" வலுவற்ற கொள்கையால் அழிவெய்தினர். விவாதிப்போர் சிலர் தந்திரயுத்திகளைப் பயன்படுத்தி வெற்றி பெற முனைவர். திருப்பாசுரப்பாடல்கள் முற்றிலும் ஐந்தின் நிலைப்பாட்டில் தருக்க நியாயமுறையில் அருளப்பட்டிருப்பதால் அவற்றில் தந்திரங்களுக்கு இடமில்லை என்பதை பாக்கள் உணர்த்தும்.

நிறைவுரை :

"இலங்கை அரசு" வெளியிட்ட, இந்து கலைக்களஞ்சியத்தில், பலசெய்திகள் தொகுக்கப்பட்டுள்ளன. ஆனால், சமணரோடு சம்பந்தர் நிகழ்த்திய வாதநிகழ்வுகள் குறிப்பிடப்படாமல் இருப்பது வியப்பிற்குரிய செய்தியாகும். தருக்க நூல் வரலாற்றிலும் "சம்பந்தர்" வாதம் எடுத்துக்காட்டப் பெறவில்லை. தருக்கம் என்பது, பக்கம், ஏது, திட்டாந்தம், உபநயம், நிகமனம் ஆகிய ஐந்து அங்கங்களை உடையன என விளக்கி, மேலும் விரிவாக ஆய்வு செய்த செய்திகளிலும், நாமே ஒப்பிட்டுப் பார்த்து, வாது செய்த வாரணத்தின் திருப்பாசுரப்பாடல் மூலமாகத் தெளிவு காண வேண்டியுள்ளது.

ஆகவே , மதுரை "வைகை" "யாற்று" "மைய மண்டபம்" திருப்பாசுரம் தோன்றிய இடம். திருவேடகம் திருப்பாசுரம் சென்று தங்கிய இடம். திருப்பாசுர ஏட்டின் முக்கியத்துவம் உணர்த்த நெடுமாறன், திருவேடகத்தில் ஏடகநாதர் திருத்தளி அமைத்தான். சம்பந்தர் வாணாளில் பெரும் பகுதியான மாதங்கள் இத்தலத்தில் கழிந்தன என்பதும் "ஓராண்டு" இங்கு தங்கி வழிபட்டு மீண்டதாகவும் புராணச் செய்தியாகும்.

ஆவணிப் பௌர்ணமியன்று ஏகதின விழாவாக திருவேடகத்தில் ஏடுஎதிரேறிய விழா நிகழ்கிறது. இவ்விழாவை நிகழ்த்த ஆணையிட்ட முன்னைய ஆணையர் திரு. எம்.எஸ்.சாரங்கபாணி முதலியார் அருஞ்செயல் நினைவு கூர்ந்து வணங்கத்தக்கதாகும். தருமைக் குருமணிகள் ஞானரதத்தோடு இத்தலத்துக்கு எழுந்தருளி வழிபட்ட செய்தியும் நினைவு கூர்ந்து போற்றத்தக்கதாகும். அவ்வாணையர் நங்குருமணிகளைப் போற்றி அருட்பணி உடனாக இருந்து செய்த சம்பவங்களும் வரலாற்றுப் பதிவுகளாகும்.

---

# குன்றக்குடிக்குக் கை கூப்பு

(கவிஞர்கோ. சிற்பி பாலசுப்பிரமணியம்)

என்னையும் பார் நானும்
ஏதுமற்ற ஆண்டி என்று
தன்னையும் புலப்படுத்தித்
தமிழ்ப் பழனி மலைமீது
சின்னக் குழந்தையெனச்
சிரித்தபடி நிற்கின்றான்
அன்றென் மழலையிலே
ஆட்கொண்ட திருமுருகன்!

பின்னர் ஒரு நாள்
பெருங்கடலின் அலையோரம்
பொன்னைத் தகடடித்த
புதுமணலின் கரையோரம்
என்னைப்பார் வள்ளியுடன்
எழில் தெய்வ யானையுடன்
சென்றொழிந்த இளமையிலே
செப்பினான் வேல் குமரன்!!

ஆலயங்களுக் கப்பால்
அடிவைத்துப் போய்விட்ட
கால முதுமையினில்
கைகூப்பி நிற்கின்றேன்
மால் கடிந்த எமது தமிழ்
மா முனிவன் வீற்றிருந்து
கோலத் தமிழ் பொழிந்த
குன்றக்குடி நோக்கி!.

# "அம்மா என்றோர் ஆலயம்"

(தமிழாகரர். தெ. முருகசாமி)

*அம்மா என்றால் அம்மாதான்! - மற்று*
*ஆயிரம் வரினும் சும்மாதான்!*
*அம்மா தெய்வத்தைத் துறக்காதே! - அந்த*
*ஆலயம் தொழவே மறக்காதே!*

ஆம், இது ஒரு கவிஞனின் குரல், ஆயிரம் ஆயிரம் பொருள் பொதிந்த வீறு கொண்ட விசையானதொரு சொல் தமிழில் உண்டென்றால் அது அம்மா என்ற ஒரு சொல்தான். அதிசயம் அநேகம் உற்ற அந்தச் சொல்லுக்குள் அகிலமே அடக்கம்.

*அள்ளி யிடுவ தரிசியோ? தாய்தலைமேல்*
*கொள்ளிதனை வைப்பேனோ? கூசாமல் - என்னை*
*முகமேல் முகம்வைத்த முத்தாடி என்தன்*
*மகனே அனஅழைத்த வாய்க்கு!*

எனப் பட்டினத்தார் போல் கடந்த ஞானியும் கடக்கமுடியாதபடிக் கட்டுப்படுத்தவல்ல பாசப்பிணைப்பான கனத்த சொல் அம்மாதான். தாயிலி தந்தையிலி எனப்படும் ஆண்டவனுக்குக் கூடத் தனக்குத் தாய் வேண்டுமே என எண்ணிக் காரைக்கால் அம்மையாராம் புனிதவதியை அம்மா என அழைத்துப் பழகிய சொல் அது.

அம்மா என்ற அந்தச் சொல்லில் ஆவேசம் உண்டு. அரவணைப்பும் உண்டு, ஆனந்தம் உண்டு. அதட்டலும் உண்டு, கனிவு உண்டு, கண்டிப்பும் உண்டு, வாஞ்சை உண்டு, வக்கரிப்பும் உண்டு, அதைக் குழந்தை முதல் கிழவர் வரையுள்ள மனிதகுலத்தின் மந்திரச் சொல்லாக மட்டும் சொல்லமுடியாது. ஏனென்றால் இனம்புரியாமல் துள்ளித்திரியும் அஃறிணைக் கன்று கூடத் தன் தாயை நாதமாக எடுத்து மொழியும் நாரதகானமாக உச்சரிக்கும் மொழி அம்மா ஒன்றே! எனவே அந்தச் சொல்லுக்குள்தான் எத்தனை எத்தனை ஆனந்தம்! எத்தனை எத்தனை குதூகலம்! எத்தனை எத்தனை அற்புத சுகம்! அப்பப்பா! கணக்கிடமுடியாத அந்த ஓவியச் சொல் மன்னுயிர்க் காவியம். அதனால்தான் தாயிற் சிறந்ததொரு கோயிலும் இல்லை என்றனர் நம் முன்னோர்.

ஒரு பெண் ஆண் தந்த கருவைத் தாங்குவதால் அவள் தாய் எனப்படுகிறாள். அந்தக் கருவை அவள் தாங்குவது முதல் அதன் சுகதுக்கங்கள் அனைத்தையும் கண்ணுக்குத் தெரியாமலேயே முந்நூறு நாள் சுமத்தலோடு கருவை அழகிய உடலாக உயிர்ப்பதால் அம்மா ஆகிறாள். உயிர்ப்பித்த பிறகு வெளிப்புற உலகில் சாகும் வரை மனதாலும் உடலாலும் தாங்கும் மகிமையால் அவள் மாதா பிதா குரு தெய்வம் என்ற வரிசையில் முன்னிலைப்படுத்தப்படுகிறாள். சுருக்கமாகச் சொன்னால் கருப்பையில் குடிபுகுந்த உயிர்ப்பை உருவாக்கித் திருவாக்கித் தந்த கண்கண்ட தெய்வம் அம்மா என்பதால் அன்னையும் பிதாவும் முன்னறி தெய்வம் என்பதிலும் கூட அவளே முந்திக் கொள்கின்றாள். இவ்வுண்மையை உறுதிப்படுத்துவார் போல வடலூர் வள்ளலார் தன்னைத் தாயாகித் தந்தையுமாய்த் தாங்குகின்ற தெய்வம் எனத் தந்தையினும் தாய்க்குள்ள முதன்மையைச் சுட்டினார்.

தாயின் வயிற்றிலிருந்து குழந்தை வெளிப் போந்ததும் கூட்டை விட்டு விடுதலையாகிப் பறக்கும் சிட்டுக்குருவியைப் போல் பறந்து வேறுபட்டு விடுவதில்லை. அறுபடாதிருந்த தொப்புள் கொடி அறுந்துபட்டாலும் தொட்டுத் தொடரும் பாசம் அறுபடுவதில்லை. பதியம் போட்ட செடியாக வளர்ந்து மரமாக ஓங்கி அரும்பு, பூ, பிஞ்சு, காய், கனி, விதை என அடுத்தடுத்த வாரிசை உருவாக்கித்தரும் உற்பத்திச் சாலையாகத் தாயே உள்ளாள். மாந்த இனத்தில் உணரப்படும் இத்தாயின் மகிமையைப் போல உயிர்க் கூட்டங்கள் எல்லாம் தோன்றி மறையும் இந்த பூமியைக் கடவுளின் கருப்பையாகவே கருதலாம். அக்கடவுளே பராசக்தி. அப்பராசக்திக்குள் பார் முழுவதும் அடக்கம் என்பதால்தான் அபாரசக்தியாக உள்ள அவள் செகன்மாதா எனப்பட்டாள். அவளே புவனேசுவரி; அகிலாண்டேசுவரி என்றெல்லாம் வருணிக்கப்பட்டாள். அங்ஙனம் அவளை வாயார அழைக்கச் செய்தது எது? அதுதான் சிவம்.

அச்சிவமே வித்து. அவ்வித்து ஊன்றப்படும் பூமியே சக்தி. இவ்விரண்டின் கூட்டுறவால் ஒரு நெல் நூறு நெல்லாதல்போல பலப்பல உயிர்க்கூட்டங்கள் உருவாகின்றன. பொதுவாக உலகியலில் ஒன்று ஒன்பதாக அல்லது பத்தாகக் கிளைப்பதாய்க் கூறுவதுண்டு. அப்பொருத்தத்தைச் சிவசக்திக்குள்ளும் பொருத்திப் பார்க்கலாம். சிவனிரவு எனப்படும் சிவராத்திரி ஒன்றை மட்டுமே கொண்ட சிவனைவிட ஒன்பதான நவராத்திரி உடையவள் அம்பிகைதான். சக்தி அம்சமான

திருமால் பத்துமுறை பிறந்த தசாவதாரப் பெருமை சிவனுக்கில்லை. இவையெல்லாம் ஆணைவிடப் பெண்மைக்குள்ள சிறப்பை உணர்த்திக் காட்டும் புராணச் செய்திகளாக உள்ளன.

எனவே காலதத்துவத்தின்படி ஆண்பெண் கூறுகளின் கலந்த மயக்கமே உலகம் என்பதால் சிவத்தைச் சீவனாக்கும் ரசவாதத்தன்மை பராசக்தியைச் சார்ந்ததாகின்றது. அந்த வகையில் அவளை அம்மா எனும்போது ஆன்மா பெறும் தெய்வீக அழகிற்கு அளவே இல்லை. செயலற்றதான சிவத்தைச் சக்தி பற்றியதும் பரிணமிக்கும் மாயா காரியங்களால் உலக உற்பத்தி நிகழ்கின்றது. இதைப் புண்ணியவாளர்களே உணர்வர் என்கிறார் திருமூலர்.

*அண்ணல் இருப்பது அவள்அக் கரத்துளே*
*பெண்ணின் நல்லாளும் பிரான்அக் கரத்துளே*
*எண்ணி இருவர் இசைந்தங்கு இருந்திடப்*
*புண்ணிய வாளர் பொருளறி வார்களே.*

இப்படியாக இறைவன் ஆண்பெண்ணாகக் காட்சி கொடுத்தாலும் இறைத்தத்துவத்திற்குரிய நாம ரூபத்தைத் தரவல்ல ஒன்று தந்தை தாய் என்றதோர் அப்பா அம்மாவாம் உதடுகள் ஒட்டி உச்சரிக்கும் உறவு முறையோயாகும். இவ்விரண்டில் தந்தை உறவினும் தொப்புள் கொடி உறவான தாய் உறவே அலாதியானது; சொந்தமானது. "சின்னஞ்சிறு கிளியே கண்ணம்மா! செல்வக் களஞ்சியமே, என்னைக் கலிதீர்த்தே ஏற்றம் புரிய வந்தாய்! பிள்ளைக் கனியமுதே, பேசும் பொற்சித்திரமே, அள்ளி அணைத்திடவே ஆடி வருந்தேனே, உச்சிதனை முகந்தால் கருவம் ஓங்கி வளருதடீ மெச்சியுனை யூரார் புகழ்ந்தால் மேனிசிலிர்க்குதடீ" என எந்தத் தந்தையும் குழந்தையைக் கொஞ்சுவதில்லை. அந்தக் கொஞ்சலும் கெஞ்சலும் தாயிடம் மட்டுமே பார்க்கக்கூடிய ஒன்றாகும். இப்படிக் கொஞ்சுவதன் மூலம் தாய் தன் குழந்தையிடம் தன்னையிழந்த சுகத்தைக் காண்கின்றாள். அந்தச் சுகத்தில் குழந்தை தன்னை நோகடித்தாலும் குழந்தையை அவள் நோகடிக்க மாட்டாள். எனவே அஃவள் உறவு கலங்க மற்றது. அதனால்தான் சாகும்வரை, வயது வந்த தன் பிள்ளைகளுக்கு விலைமதிப்பில்லா வைரத் தொட்டிலாகத் தாயின்மடி ஒன்றே இவ்வுலகில் உள்ளது. இவ்வுண்மையை அன்றாடம் வீட்டில் நினைவூட்டும் விதமாகவே அம்மியும் குழவியும் ஒன்றைவிட்டு ஒன்று பிரிக்கமுடியாத சாட்சியாக உள்ளது.

இவ்வாறு உணரப்படும் தாயின் அரவணைப்பைப்போல் அவளின் சகிப்புத் தன்மைக்கு ஏதுவிலை? அவள் கருவுயிர்த்தபோது கசடுகளோடு பிறந்த குழந்தையை அப்படியே கொண்டாடுவதில்லை, துடைத்துத் தூய்மை செய்ததுமே கொண்டாடுவர். இது பொதுநிலை. ஆயினும் அசூசை செய்துவிட்ட குழந்தையை எந்தத் தந்தையும் தொடுவதே இல்லை. மாசுமறுவற்ற அதாவது மலமற்ற உள்ளத்தால் குழந்தையின் மலத்தை, சிறுநீரைக் கழுவிக் காப்பாற்றும் காவல் தெய்வமாகத் தாய் ஒருத்தியே உள்ளாள் என்பதால்தான் குலசேகர ஆழ்வார் கூறுவதுபோல "அரிசினத்தால் ஈன்ற தாய் அகற்றிடினும் மற்றவள்தன் அருள் நினைந்தே" அழும் அன்புக் குழந்தையின் பரிவுக்கு மேடுபள்ளம் காணமுடியாததாக உள்ளது.

இந்த லௌகிக நிலையை ஆன்மீகத்தோடு பார்த்தாலும் அது பொருந்தும். ஆன்மாவானது அகில மாதாவோடு மட்டுமே அச்சமின்றிப் பழகலாம். அதற்கு அடையாளமாக ஒன்றைக் குறிப்பிடலாம். அதாவது ஆண்தெய்வங்களின் கைகளில் கொடிய ஆயுதம் உள்ளது போலப் பெண் தெய்வங்களின் கைகளில் கொடிய ஆயுதம் இல்லாமல் இருப்பதே செகன்மாதாவின் கருணையை உணர்வதற்கான அடையாளம் எனலாம். எனவே நாம் நம் வீட்டுத் தாயிடம் எதையும் கேட்டுப் பெறுதல் போல் செகன்மாதாவிடமும் ஆன்மா எதையும் கேட்டுப் பெறலாம்.

நோயின்மை, கல்வி, தனம், தான்யம், அழகு, புகழ், இளமை, பெருமை, வாழ்நாள், வெற்றி, துணிவு, அறிவு, வலி, சந்தானம், ஆகும் நல்லூழ், நுகர்ச்சி எனப்படும் பதினாறு பேறுகளையும் அளித்துச் சுகானந்த வாழ்வளிப்பாய் எனக்கேட்டால் அவள் தரத்தயாராக உள்ளாள். கேட்கும்போது எந்தக் கசடும் உள்ளத்தில் இருக்கக்கூடாது. "சுகிர்த குணசாலி, திரிசூலி, அனுகூலி, மங்கலவிசாலி, மகவு நான், நீதாய் அளிக்கொணாதோ?" என்ற உரிமையில் குரல் கொடுப்பதைக் கேட்டு அருள்பாலிக்கும் எளிவந்த சௌலப்பியக் கருணையை அம்பிகையன்றி யார் வழங்க உள்ளார்? எனவே தாய் மகவு உறவு மிகச் சிறந்தது. மற்றைய உறவுகள் அடுத்தடுத்துத்தான் என்பதால் நாம ரூபமற்ற கடவுளுக்கு உருவம் அமைக்க நினைத்தபோது நம்மோடு ஒட்டி உறவாடக்கூடிய கண்ணுக்குத் தெரிந்த தாயை உவமைப்படுத்தினர் நம் ஆன்றோர். இதனைத்தான் "தாயினும் சாலப் பரிந்து" என்ற திருவாசகத் தொடரால் பரம்பொருளைத் தாயாக அனுபவிக்க முடிகிறது. எனவே கள்ளங்கபடமற்ற

தாய் உறவுவைப் பரம்பொருளை எட்டுத்தற்குரிய ஏணி எனலாம். இந்த ஒட்டுறவின் பாலமாக அமைந்த உலக வழக்குச் சொல்தான் பூமாதேவி.

ஒரு பெண்ணின் கருப்பைக்குள் புகுந்த உயிர், கைகால் முதலிய உறுப்புகளுடன் உடலாகி அது நிலத்தில் விழுவதற்குள் அப்பெண்ணின் வயிற்றுக்குள் நடக்கும் அற்புதந்தான் என்னே? வளரும் கருவுக்கு வெளியுலக வாசனையே படாதவாறு சீல் வைக்கப்பட்டதுபோல் மூடப்பட்ட பனிக்குடப் பாதுகாப்பை என்னென்பது? கருவளரும் வளர்ச்சிக்கேற்ற இடவசதியுடன் கைகால் உறுப்புகள் எவ்வித ஊறும் இல்லாதபடி வயிற்றுக்குள் சுரக்கும் திரவத்தோணியில் மிதந்து தேவையான ஊட்டச்சத்தை ஊட்டும் தொப்புள் கொடி உன்னதந்தான் ஒரு பெண்ணைத் தாயாக்குகிறது.

இதே அமைப்பை உலக மாதாவோடும் பொருத்தலாம். தாயின் பனிக்குடம்போல் சூரிய மண்டலத்தின் ஓசோன் படலம் உலகை மூடியுள்ளது. வயிற்றுள் சுரக்கும் திரவம்போல் பூமியின் நிலத்தடி நீராதாரத்தால் உயிர்கள் பிழைக்கின்றன. இந்நீர்நிலைகளின் உதவியால் உற்பத்தியாகும் தாவரங்கள் மன்னுயிரைக் காக்கின்றன. இப்படி ஒவ்வொன்றாகச் சிந்தித்தால் இந்தப் புவனமே புவனேசுவரியின் கருப்பைதான் என உணரலாம். அந்தக் கருப்பைக்குள்தான், அண்டசராசர உருவாக்கல்களும் நிகழ்கின்றன. இவ்வுருவாக்கத்தில் எல்லா உயிர்களும் உடல் சம்பந்தப்படும்போது உலக வாழ்வைப் பெற்றுவிடுகின்றன. அதனால் இன்ப துன்பங்களை உடலும் உள்ளமும் நுகர நுகர இருவேறு வாழ்வு நிலைகளான இம்மை, மறுமை பற்றிய உண்மைகளை அறிந்துகொள்கின்றன. அவ்வறிவும் புலப்பாட்டில் உலக வாழ்வைப் பந்தப்படுத்துபவள் அம்பிகை என்பதும் அப்பந்தத்தை அறுத்து உயிருக்கு உய்தியளிப்பது சிவம் என்பதும் உயிர் படிப்படியே உணர்ந்து கொள்கின்றது.

உயிர் உலகவாழ்வோடு பந்தப்படும்போது புல்லாகிப் பூடாய் புழுவாய் மரமாகிப் பல்விருகமாகிப் பறவையாய் பாம்பாய் கல்லாய் மனிதராய், பேயாய், கணங்களாய் ஆகும். இவ்ஆக்கம் சக்தியின் மாயா காரியத்தால் திகழ்கிறது. இப்படி உயிருக்கு உடல் கொடுத்து உலக வாழ்வில் கட்டிப்போடும் போது எல்லா உயிரும் தமக்கான மூலம் எது என்பதை உணர்வதில்லை. உணரும் ஒரே உயிர் மனித உயிர் மட்டுமே.

அவ்வுயிரின் பக்குவ நிலைக்கேற்ப அம்பிகை, அவ்வுயிரை உலக வாசனையினின்றும் நீக்கி முக்திக்குப் பரிந்துரைக்கும் போதுதான் உயிர் உய்தியடையத் தயாராகிறது. இதைத் தான் மணிவாசகர் "பேதித்து நம்மை வளர்த்தெடுத்த பெய்வளை" என்று அம்பிகையைப் பாராட்டுகிறார். உலகியல் வாழ்வில் ஒருவர் வெளிநாடு செல்ல விசா உரிமம் பெறுவது போலப் பூமியில் பாவபுண்ணியங்களில் கட்டுண்ட ஆன்மா வீடுபேறு பெற வேண்டுமானால் புவனேசுவரியின் கடைக்கண் பார்வையாம் விசாவைப் பெற வேண்டும் என்பது இதன் கருத்து.

ஆன்மீக உலகில் சிவசக்தி வெளிப்பாட்டை நம் தந்தைதாயரைக் கொண்டே உணரலாம். தந்தையிடம் குழந்தை பழகுவதற்கும் தாயிடம் பழகுவதற்கும் பெருத்த வேறுபாடுண்டு. வயது முதிர முதிர தந்தை குழந்தை உறவில் சிறு பிரிவு ஏற்படும். ஆனால் தாயிடம் அப்படி இல்லாததோடு எப்போதும் ஒரே சீரான அன்பே இருக்கும். தந்தை உறவு, கறந்த பாலில் நீரூற்றிக் காய்ச்சி இனிப்பைச் சேர்த்து குடிப்பது போன்றது. தாய் உறவோ அவளிடம் தானாக ஊறும் பால் போன்றது. அதைக் கறந்து வைத்துக் காய்ச்சிக் குடிக்க முடியாது. கறந்த பசுவின் பாலுக்கு விலை உண்டு. ஆனால் தாய்ப்பாலுக்கு ஏது விலை? அதன் சுவையோ இயற்கை இனிப்பானது. அதனால்தான் கறந்தபால் கன்னலொடு நெய்கலந்தாற்போல எனச் சிவனைக் கூறிய மணிவாசகர் தாயினும் சாலப்பரிந்து எனச் சக்தியாக மாற்றி அனுபவிக்கிறார். நன்றே செயினும் பிழையே செயினும் அசூசை செய்யினும். அந்நியப்படுத்தாமல் அரவணைக்கும் தாய்போல் தந்தை அரவணைப்பதில்லை. இது தந்தையின் குறையன்று; இயல்பு. இதைத் தான் "கன்றினுக்குச்சேதா கனிந்திரங்கல்போல எனக்கு என்றிரங்குவாய் கருணை எந்தாய் பராபரமே" எனக் கடவுளைத் தாயாகப் பார்க்கும் பார்வையில் தாயுமானவர் தாய்ப்பாசத்திற்கு ஏங்குகிறார். கம்பரும்.

*தாய்தன்னை அறியாக் கன்றில்லை தன்கன்றைத்*
*தாயும்அறியும்; உலகில் தாயாகி, ஐய!*
*நீ அறிதி எப்பொருளும்! அவை உன்னை நிலையறியா*
*மாயை இது என்கொலோ?*

எனத் தாயுறவின் தெய்வீகத்தில் மனம் கசிந்துபாடுகிறார். இத்தாய் கன்று உறவில் ஓர்நுட்பம் உள்ளது. அதாவது பல்லாவுள் உய்த்துவிடினும் குழக்கன்று, வல்லதாம் தாய் நாடிக் கோட் போலக் கன்று தாயையும் தாய்

கன்றையும் உணர்ந்துகொள்ளத் துடிப்பது போலக் கன்று தந்தையாகிய காளையையும் காளை கன்றையும் உணர்ந்து கொள்ளாதது ஏன்? என்ற இயற்கைப் பதிவான ஒன்றுதான் இச்செய்தியின் மறுபக்கமான வினாவாகக் கருதலாம். எனவே தாய்க்கும் பிள்ளைக்குமான பாசப்பிணைப்பு மலரில் மணம்போல் பிரிக்கமுடியாததாகும். ஆக, கண்டதைக் கொண்டு காணாததை உணர்தல் என்ற தத்துவத்தின்படி நம்மை வாழ்விக்கும் நம் தாயன்பைக் கொண்டே இவ்வுலகைக் கருவுறாதீனும், பராசக்தியே உலகத்தாய் என உணர்ந்து உய்வோமாக! எனவே "அம்மா" என்பது செய்யுளில் இட்டு நிரப்பக் கூடிய வியப்படைச் சொல்லன்று; வாழ்வின் அசதிபோக்கும் அற்புதச் சொல் ஆக .

அம்மா என்றால் அம்மாதான் - மனமே
ஆயிரம் வரினும் சும்மாதான்!
அம்மா தெய்வத்தை மறக்காதே! - அந்த
ஆலயந் தன்னைத் துறக்காதே!

---


## மக்கள் சிந்தனை

உரிமை - பதிப்பு அறிக்கை

| | | | |
|---|---|---|---|
| 1. | இதழின் பெயர் | : | மக்கள் சிந்தனை |
| 2. | மொழி | : | தமிழ் |
| 3. | வெளியீடு | : | திங்கள் இதழ் |
| 4. | வெளியீடு இடம் | : | குன்றக்குடி - 630 206 |
| 5. | ஆசிரியர் } | : | **மரு. பரமகுரு** |
| | உரிமை | : | திருவண்ணாமலை ஆதீனம்,குன்றக்குடி |
| 6. | பதிப்பாளர் } | : | **பழ. பாண்டித்துரை** |
| | அச்சகம் | : | சண்முகநாதன் அச்சகம், மேலரதவீதி, குன்றக்குடி. |
| 7. | பதிவு | : | செய்தி இதழ் |

*மேற்கண்ட விவரம் யாவும் உண்மை என்றும், நம்பத் தகுந்தவை என்றும் உறுதி கூறுகிறேன்.*

நாள் : 17.3.2014 **மரு. பரமகுரு**

# "குறளார் காட்டும் குளிர்தமிழ்ப்பண்பு"

(புலவர். திருக்குறள் நாவை சிவம்)

**உலகச் சிந்தனையை ஊட்டும் நூல்!**

இப்பாலும் அப்பாலும் காணவொணா இனிய நலன்கள் கொஞ்ச முப்பால் கண்ட மூதறிஞர் திருவள்ளுவர். இவரின் ஒப்புயர்வில்லாத திருக்குறளை ஆங்கிலத்தில் மொழிபெயர்த்த அறிஞர் ஜி.யு.போப் அவர்கள், அனைத்துலக மாந்தரைப் பாடிய நூல் திருக்குறளே! என முழக்கமிட்டார். பிரெஞ்சு மொழியில் மொழிபெயர்த்த அறிஞர் சூலியன் சின்சோன் அவர்கள், "உலகச் சிந்தனையை ஊட்டும் நூல் குறள்!" என்றார். உலகமொழிகள் 2379 என்னும் ஒரு பட்டியலில், முந்தித் தோன்றி மூத்து முதிர்ந்து, சிந்துபுகழ்பாடும் செந்தமிழ் ஒன்றே உயர்தனிச் செம்மொழி என்று உலகினரால் போற்றப்படுகிறது. இதற்கு மேலும் இனிமை கொஞ்ச, விஞ்சுபுகழ்தந்து, நெஞ்சை மகிழ்வு செய்யும் நிலைபுமைப் பனுவல் திருக்குறளே எனில் மிகையேதுமில்லை. இதுவரை இந்நூல் 127 மொழிகளில் மொழிபெயர்க்கப்பெற்றும், 300-க்கு மேற்பட்ட அறிஞர்களால் உரையெழுதப்பெற்றுமுள்ளது. அவரவர் அறிவு வலிமைக்கு ஏற்ப ஆழ்கடல் முத்தென கருத்துச் செறிவு தருகின்ற நம் கற்கண்டுக் குறளில் நூறாவது அதிகாரமாய் சீரார்ந்து குலவுவது பண்புடைமையாகும். அது பற்றி ஈண்டுக் காண்போம்.

**பல நல்ல குணங்களின் திரட்சியே பண்புடைமை!**

"பண்பெனப்படுவது பாடறிந்து ஒழுகல்"என்று கலித்தொகை - (133) பாடும். "பெருமை, சான்றாண்மைகளில் தாம் வழுவாது நின்று எல்லாரியல்புகளும் அறிந்து ஒத்து ஒழுகுதல் பண்புடைமை" என்று, முதன்மை உரையாசிரியர் பரிமேலழகர் பகர்வார். "சான்றாண்மையை மேற்கொண்டு அவரவர் குணமறிந்து அதற்கேற்ப ஒழுகல் பண்பாடு" என்று தமிழ்மரபுரை கண்ட மொழிஞாயிறு பாவாணர் மொழிவார். குறளார் காட்டும் பத்து உடைமைகளில் பண்புடைமையும் ஒன்று. இவ்வதிகாரம் பொருட்பாலில், குடியியலில் அமைந்தது எனப் பரிமேலழகருக்கு முற்பட்ட, திருவள்ளுவமாலையில் இடம்பெற்ற போக்கியார் கூறுவார். அரசருக்கு வேண்டியவை உள்ளதால் ஒழிபியலில் அமையும் எனப் பரிமேலழகர் பேசுவார். திருக்குறளில் "பண்பு" என்னும்

சொல் 26 இடங்களில் இடம்பெற்றுள்ளது. "கல்ச்சர்" என்னும் ஆங்கிலச் சொல்லுக்கு "பண்பாடு" என்று இரசிகமணி டி.கே.சிதம்பரநாதர் மொழிபெயர்த்தார். ஆக பல நல்ல குணங்களின் திரட்சியே பண்பாடு எனவும், குடிமக்களேயன்றி அரசரும் கட்டாயம் கடைப்பிடிக்க வேண்டிய ஒழுகலாறு எனவும், தெள்ளிதின் உணரலாம். எனவே மாந்தக் குலத்திற்கு மாண்பும், மகிழ்வும் ஊட்டும் பண்பாட்டுச் சிறப்பை திருவள்ளுவப் பேராசான் படப்பிடிப்பின் வழி பார்த்து மகிழ்வோம்.

**எளிய குணத்தருக்கு எய்தும் பண்பே!**

பார்வைக்கு எளிமையும், பழகுதலில் இனிமையும் பொருந்த வாழ்பவர்கள் பண்புடைமை என்னும் நல்ல அறவழியை எளிதில் அடையலாம் என்று அறிவிக்கிறது குறளார் காட்டும் குளிர்தமிழ்ப் பண்புச் சோலையின் முதல் மலர்.

*எண்பதத்தால் எய்தல் எளிதென்ப யார்மாட்டும்*
*பண்புடைமை என்னும் வழக்கு - 991*

இக்குறளுக்கு ஒப்பாக வருகின்ற 386-ஆம் குறளும்

*காட்சிக்கு எளியன் கடுஞ்சொல்லன் அல்லனேல்*
*மீக்கூறும் மன்னன் நிலம்*

என்றுகூறி நாடாளும் வேந்தருக்கும் இந் நற்பண்பு வேண்டும் என்று நவில்கின்றதன்றோ!

**பண்புடைமைக்குச் சான்று பகர்வன :**

எல்லோரிடத்திலும் அகமும் முகமும் மலர்ந்திடப் பழகுதலும், அன்பும் நல்லிணக்கமும் கொண்டு களிக்கும் தன்மையும், சிறந்த குடியில் பிறத்தலும் ஆகிய இரண்டும் பண்புடைமைக்குச் சான்று பகரும் வழிகளாம். வள்ளுவப் பாட்டனாரின் தெள்ளுதமிழ்ப் பண்பாட்டு ஓவியத்தின் இரண்டாம் காட்சியாம் இதனை

*அன்புடைமை ஆன்ற குடிப்பிறத்தல் இவ்விரண்டும்*
*பண்புடைமை என்னும் வழக்கு -992*

எனக்காட்டி மகிழ்வூட்டும், பண்புடைமை அதிகாரத்தில் ஒரே ஈற்றடியைப் பெற்ற முதலிரு குறட்பாக்களும் பண்புடைமை பெறுவதற்கான நெறிமுறை காட்டும்.

**உயர்ந்த குணத்தரே ஒப்புமையாளர் :**

கண், காது, மூக்கு, கை, கால் போன்ற உடலுறுப்புகளால் ஒரே மாதிரி இருப்பவர் அனைவரும் மக்கள் என்பது பொருந்தாது. உயிரும் உள்ளமும் நெருங்கிய அன்பால் ஒத்திருப்பவரே உண்மை மாந்தராவர். ஏனெனில் புறநிலையில் மாந்தர் போலிருப்பினும் அகநிலையில் விலங்குகள் போல் வாழ்பவர் உளர், திருவொற்றியூரில் அம்மணமாய்த் திரிந்த துறவியார் ஒருவர், வழியிற் செல்பவர்களையெல்லாம், நாய் போகிறது, பன்றி போகிறது, என்று கூறிக்கொண்டிருக்கையில், அவ்வழியில் வந்த வடலூர் வள்ளலாரைக் கண்டதும், "இதோ மனிதன் வருகிறான்" என்று கூறிக்கொண்டே தம் வெற்றுடம்புக்கு நாணி, வருந்தி, ஓடி ஒளிந்ததாக வள்ளலார் வரலாறு கூறும் "மக்களே போல்வர் கயவர்" -(1071) என்னும் குறளும் இக்கருத்தையொட்டிச் சுட்டும். எனவே உறுப்பு ஒற்றுமை அல்லாது பண்பு ஒற்றுமையே உண்மை மாந்தருக்கு ஒப்புமை என்று வாழ்வியல் நூலில் வதியும் பண்புடைமையில் மூன்றாம் குறள் முழங்கும். இதோ அது,

*உறுப்பொத்தல் மக்களொப் புஅன்றால் வெறுத்தக்க*
*பண்பொத்தல் ஒப்பதாம் ஒப்பு - 993*

**பயனுடையாரை உலகு பாராட்டும்**

"என் கடன் பணிசெய்து கிடப்பதே!" என அப்பரும், "அன்பர் பணிசெய்ய என ஆளாக்கி விட்டுவிட்டால் இன்பநிலை தானே வந்து எய்தும்!" எனத் தாயுமானவரும் "ஆருயிர்கட்கு எல்லாம் நான் அன்பு செயல் வேண்டும்" என வள்ளலாரும் கூறுகின்ற தொண்டுப் பழமொழிகளுக்கு வித்திட்டவர் வள்ளுவரேயாவர். வாழு! வாழவிடு! வாழ வை! என்ற அறிவுரைக்கேற்ப பிறர் வாழத் தான் வாழ்பவர் நீதியையும், அறத்தையும் என்றும் விரும்பிக் கடைப்பிடித்து வாழ்வர். அவர்களே பண்புடையார் ஆவர். அவர்களை உலகத்தார் பயனுடையாராகப் போற்றிப் பாராட்டும், நற்பண்பு அதிகாரத்தின் நான்காம் குறளை நாடும், நாமும் நாளும் நவிலுவோம்.

*நயனொடு நன்றி புரிந்த பயனுடையார்*
*பண்புபா ராட்டும் உலகு -994*

**விளையாட்டிலும் வெறுக்காது விரும்புதல்**

விளையாட்டில் கூட பிறரை வெறுக்காமல் பகைவரிடத்திலும் துன்பம் செய்யாமல் இனிய செயல் செய்து வருதலே பண்புடைமையாம்.

இதனை நாம் அஃகியகன்ற அறிவு வள்ளுவனார், பண்புடைமையின் ஐந்தாம் குறளாய் அன்புறக் கூறுகின்றார்.

நகையுள்ளும் இன்னாது இகழ்ச்சி பகையுள்ளும்
பண்புள பாடறிவார் மாட்டு -995

இக்கருத்தையொட்டியே, பண்புடைமையின் எட்டாம் குறளும் சுவை சொட்டச் சொட்டச் சொல்லும்! சுந்தரக் கருத்தால் நெஞ்சை அள்ளும்.

**பகைவருக்கும் அன்புசெயும் பண்பு**

நட்புக் கொள்ளாமல், பகைமை கொண்டு துன்பம் செய்பவர்களிடத்தும், அன்பும் இரக்கமும் காட்டி வாழ்வது சிறந்த பண்பாகும். அவ்வாறு நடக்காவிடில் அதுவே இழிவு என்று குறள் கூறும்.

*நண்பு ஆற்றா ராகி நயமில செய்வார்க்கும்*
*பண்பு ஆற்றார் ஆதல் கடை -998*

இக்குறளில் கோலோச்சும் இலக்கணத்திற்கு, இலக்கியமாய்த் திகழ்ந்தவர் பலர் உளர். அவர்களுள் தமக்குக் கொடுமை பல இழைத்துச் சிலுவையில் அறைந்தபோதும் "இறைவனே! தாம் செய்வது அறியாது செய்யும் இந்த ஏழையரை மன்னியும்" என்று மன்றாடிய இயேசுநாதரின் இரக்கப்பண்பு எண்ணறற்பாலது. தென்னாப்பிரிக்காவில் தம்மை அடித்து உதைத்த கயவர் மீது வழக்கு ஏதும் தொடுக்க வேண்டாம் என்று காவலர்களை வேண்டிக் கொண்ட காந்தி அண்ணலின் கழிவிரக்கப் பண்பாடும் கருதிப் பார்க்கக் கூடியது. நாடாளும் வேட்கையில் சிவ வேடம் தாங்கி வந்து தம்மைக் கத்தியால் குத்திய முத்தநாதனை "ஒன்றும் செய்யாமல் நாட்டு எல்லைவரை பாதுகாப்புடன் அழைத்துச் சென்று வழி அனுப்பி வையுங்கள்" என்று தம் காவலர்களுக்குக் கட்டளையிட்ட மெய்ப்பொருள் கண்ட நாயனார் கொண்டிருந்த இறையன்புப் பண்பாடும் நெஞ்சை நெகிழ்விக்க வல்லனவாம். இவர்கள் பெற்றிருந்த பண்பாட்டிற்கு இன்னா செய்தாரை ஒறுத்தல் (314), இன்னா செய்தார்க்கும் இனியவே செய்யாக்கால் (987) என்ற குறட்கருத்துகள் வித்திட்டிருக்க வேண்டும்.

**பிறர்க்கென வாழ்பவர் இருப்பதால் பேருலகம் நிலைத்துள்ளது**

பெறுதற்கரிய அமிழ்தம் கிடைப்பினும் பகுத்துண்ணல், வெறுக்காதிருத்தல், சோம்பல் இல்லாதிருத்தல், பழிக்கு அஞ்சுதல், வஞ்சமிலா நெஞ்சுடன் வாழ்தல், புகழ் என்றால் உயிரையும் தருதல், பழி என்றால் உலகைத் தரவரினும் விரும்பாதிருத்தல், எப்பொழுதும்

பிறருக்காக வாழ்தல் ஆகிய தன்மைகள் பெற்றவர் வாழ்வதால் தான் இந்த உலகம் அழியாமல் நிலைபெற்று வாழ்கிறது என்று கடலுள் மாய்ந்த இளம்பெருவழுதி என்பவர் பாடி உள்ளார்.

*"உண்டா லம்ம இவ்உலகம் – இந்திரர்*
*அமிழ்தம் இயைவது ஆயினும் இனிது எனத்*
*தமியர் உண்டலும் இலரே: முனிவு இலர்*
*துஞ்சலும் இலர் பிறர் அஞ்சுவது அஞ்சி*
*புகழ் எனின் உயிரும் கொடுக்குவர்: பழி எனின்*
*உலகுடன் பெறினும் கொள்ளலர்: அயர்விலர்*
*அன்ன மாட்சி அனையர் ஆகி*
*தமக்குஎன முயலா நோன்தாள்*
*பிறர்க்குஎன முயலுநர் உண்மை யானே!"*

– புறநானூறு 182

இப்பாடல் கருத்தைச் சுருக்கிக் கூறினாற்போல, பண்புடைமை ஆறாம் குறள் அழகுபடக் கூறுகிறது. பண்புடைய நல்லவர் வாழ்வதால்தான் இவ்வுலகம் நிலைத்துள்ளது. பண்புடையார் சார்பு இல்லையானால் இவ்வுலகம் மண்ணொடு மண்ணாக மறைந்து போகும். குறள் இதோ

*பண்புடையார்ப் பட்டுண் டுலகம் அதுஇன்றேல்*
*மண்புக்கு மாய்வது மன் – 996*

**மக்கள் பண்பிலார் மாய்ந்த மரமாவர்**

பொன், வெள்ளி, இரும்பு தேய்க்கவும் அறுக்கவும் பயன்படும் கருவி அரம். இது பிற உலோகத்தை அறுத்து ஒளிவிடச் செய்வதுடன், தானும் மழுங்காமல் ஒளிபெற நிற்கும். இவ்வரம்போல் கூரிய அறிவு பெற்றவர் மக்கள் பண்பு இல்லாதவராயிருப்பின், பட்டு – உலர்ந்து – காய்ந்து போன மரத்துக்கு ஒப்பாவர். திருக்குறளில் மரம் என்ற சொல் பத்து இடங்களில் உவமைக்காகச் சொல்லப்பட்டதன் நோக்கம் மாந்தர் யாவரும் கூரிய அறிவுடன் பண்பாட்டால், பயன்பாட்டால் சிறந்திருக்க வேண்டும் என்பதற்கே! வள்ளுவர் விரும்பிய ஒரு பாடல்தான் இது!

***அரம்போலும் கூர்மைய ரேனும் மரம்போல்வர்***
***மக்கட்பண் பில்லா தவர் – 997***

**பகலும் இரவாய்ப்படும்**

ஒருவருடன் ஒருவர் கூடிப்பழகி மகிழும் இன்பம் இல்லாதவருக்கு இவ்வுலகில் பகலும் இருள் படர்ந்த பொழுதாய் அமையும். மனம் விட்டுப் பழகாமல், சிரிக்காமல் ஒதுங்கி, ஒதுங்கி வாழ்பவரை உற்று நோக்கிய வள்ளுவர் கூறுகிறார் இப்படி!

*நகல்வல்லர் அல்லார்க்கு மாயிரு ஞாலம்*
*பகலும்பாற் பட்டன்று இருள்* - 999

**பண்பிலார் செல்வம் பயனற்று அழியும்**

இளையர், முதியர், நோயுடையார், நோயிலார் யாவருக்கும் வனப்பும், வலிவும், சுவையும், சுறுசுறுப்பும் தருவது பால். இப்பாலைத் தூய்மையற்ற பாத்திரத்தில் வைத்திருந்தால் திரிந்து போய்விடும். இதுபோல் ஈதல் இசைபட வாழ விரும்பாதவன் பெற்ற செல்வம், நற்செயல்களுக்குப் பயன்படாதென உவமைப்படுத்திப் பண்பாட்டை உணர்த்தும் பத்தாம் பாடல்! அதாவது அறிவார்ந்த வள்ளுவரின் ஆயிரமாவது குறள் இதுதான்.

*பண்பிலான் பெற்ற பெருஞ்செல்வம், நன்பால்*
*கலந்தீமை யால்திரிந் தற்று* - 1000

**திருக்குறள் நெறியில் சிறப்புடன் வாழ்வோம்!**

பெறுதற்கரிய மாந்தப் பிறப்பில் பீடுநடை போடும் நாம் அறிதொறும் அறிவு நலம் தரும் வாழ்வியல் நூலாம் திருக்குறளை நம் மறையாக - நெறியாக்கிக் கொண்டு, முழுமை அறிவு நலத்துடன் விழுமிய பண்பாட்டுச் சிறப்புடன் பாடறிந்து ஒழுகி, பயன்பாட்டுடன் நாடும் ஏடும் போற்ற நடையிடுவோமாக!

*பண்புடையார் பட்டுண்டே உலகம்! - இன்றேல்*
*பார்உலகை வருத்திநிற்கும் கலகம்!*
*அன்புடைமை குடிப்பிறத்தல் அறமாம்! மக்கள்*
*அடையவல்ல பண்பில்லார் மரமாம்!*
*நன்பாலும் திரிந்துவிடும் கலத்தால்! - உயர்வு*
*நானிலத்தில் விளைவதெல்லாம் நலத்தால்*
*நண்பற்றார் தம்மிடத்துங் காட்டு! - பண்பை*
*நயமில்லார் உணர்ந்திடவே ஊட்டு!*

- திருக்குறள் காவடிச்சிந்து - 100

# சைவசித்தாந்த வித்தகர்
# பேராசிரியர். திரு. கு.சுந்தரமூர்த்தி
# மறைவு

தருமபுர ஆதீனப்புலவர், பேராசிரியர் திரு.கு. சுந்தரமூர்த்தி அவர்கள் 23.3.2014இல் மறைந்த செய்தியினை "மக்கள்சிந்தனை" ஆழ்ந்த வருத்தத்துடன் தெரிவித்துக்கொள்கிறது. இப்பெரும்புலவர், எழுத்தாலும், பேச்சாலும் ஆற்றியுள்ள சைவப்பணியும் தமிழ்ப்பணியும் நாடறிந்தது. இப்பெருமகனாரின் சைவசித்தாந்தப் பெரும்புலமை கருதி குன்றக்குடி ஆதீனம் 45 ஆவது குருமகாசந்நிதானம் தவத்திரு குன்றக்குடி அடிகளார் அவர்கள் "சைவசித்தாந்த வித்தகர்" என்னும் பட்டம் வழங்கிச் சிறப்பித்தார்கள். இவர் திருப்புத்தூர்த் தமிழ்ச் சங்கப் புலவராக இருந்து பெருமை சேர்த்தவர். இப்பேரறிஞரின் மறைவு தமிழுலகிற்கும் சைவ உலகிற்கும் இட்டு நிரப்ப முடியாத பேரிழப்பாகும். இவரை இழந்து துயரத்தில் ஆழ்ந்திருக்கும் இவர்தம் குடும்பத்தினருக்கு "மக்கள் சிந்தனை" ஆழ்ந்த இரங்கலைத் தெரிவித்துக் கொள்வதுடன் இவரது ஆன்மா இறவாத இன்ப அன்பினில் திளைத்திடப் பிரார்த்திக்கிறது.

– ஆசிரியர்

---

தந்தை பெரியார் – மகாசன்னிதானம் அவர்கள் பேச்சின் முடிவில் பெரியார் குறிப்பிடுகின்றார்: எனக்கும் கடவுளுக்கும் என்ன விரோதம்? அவரை நான் பார்த்தது கூட இல்லை. எனக்குத்தேவை மனிதன் மீதுள்ள இழிவு அகற்றப்பட வேண்டும் என்பதே! நம்முடைய நாட்டில் இந்த இழிவை மாற்ற மத உலகத்தில் சிலர் முயற்சி செய்திருக்கிறார்கள். ஆனால் அவர்கள் கண்ட பலன் தோல்வியே! மகாசன்னிதானம் முயற்சி செய்திருக்கலாம். பலன் தருமா? சந்தேகம்தான்! என்றார் பெரியார்.

இருவரும் சேர்ந்து உழைப்போம் – என்றார்கள் நம் மகாசன்னிதானம்.

சம்பிரதாயங்கள் இடம் தருமா? – என்பது பெரியார் வினா. முயற்சி செய்வோம்; சம்பிரதாயங்கள் காலம் தோறும் மாறுபவையே என்று இருவரும் ஒரே நேரத்தில் கூறப் பேச்சு முடிந்தது.

*– உயிர்நாரில் தொடுத்த மாலை பக்கம்: 186*

# இரங்கல் செய்தி

தூத்துக்குடி D.A. சில்க் உரிமையாளர், உலகத்திருக்குறள் பேரவையின் உறுப்பினர், தமிழ்நாடு சைவ வேளாளர் முன்னேற்றச் சங்க நிர்வாகத் தலைவர், தமிழ்நாடு சைவ வேளாளர் சங்க முன்னாள் மாநிலச் செயலாளர், சைவ சித்தாந்த சபை அமைச்சர், D.A. ஜவுளிக்கடை நிறுவனர் தி.ஆறுமுகம்பிள்ளையின் இளைய மகனுமான D.A. சங்கர் சென்னையில் 30.01.2014 வியாழக்கிழமை இரவு 8.00 மணியளவில் இயற்கையெய்தினார்.

இறுதிச் சடங்குகள் 01.02.2014 சனிக்கிழமை காலை 8.00 மணியளவில் தூத்துக்குடியில் நடைபெற்றது.

இடுகாட்டில் இரங்கல் கூட்டம். உலகத் திருக்குறள் பேரவையின் மாவட்டத் தலைவர் திரு. ஆ. திருச்சிற்றம்பலம் தலைமையில் நடைபெற்றது. தமிழ்நாடு சைவ வேளாளர் சங்க மாநிலத்தலைவர் திரு. கணபதி சந்தானம், பொதுச் செயலாளர் "சைவநெறி" காந்தி, சூரியபிரகாசு, சரவணப்பெருமாள், பெரும் வணிகர் விநாயகமூர்த்தி, ஜவுளி ரெடிமேடு சங்க மாவட்டப் பொருளாளர் ஈசுவரன், புலவர்கள் சங்கரலிங்கம், அருணாசலம், அரிமா நிர்வாகி தன்ராசு, வி.பி.ஆர்.சுரேசு, சோதிமணி, உலகத் திருக்குறள் பேரவையின் மாவட்டச் செயலாளர் "திருக்குறள்" மோ. அன்பழகன் ஆகியோர் இரங்கலுரை ஆற்றினார்கள்.

இறுதி ஊர்வலத்தில் சைவ வேளாளர் சங்க நிர்வாகிகள், வியாபார சங்க நிர்வாகிகள், மாவட்டத் தமிழ் அமைப்பினர், பொதுமக்கள் திரளாகக் கலந்து கொண்டனர்.

## வருந்துகிறோம்

உலகத்திருக்குறள் பேரவையின் துணைத்தலைவரும் இப்பேரவையின் வளர்ச்சிக்குத் தொடர்ந்து 30 ஆண்டுகளுக்கு மேலாகத் தொண்டாற்றியவருமான திருக்குறள் செல்வர் புலவர். திரு. **வீ.செ.கந்தசாமி** அவர்களின் மறைவு உலகத் திருக்குறள் பேரவைக்கு ஈடுசெய்ய முடியாத இழப்பாகும். அவரை இழந்து துயரத்தில் ஆழ்ந்திருக்கும் அவர்தம் குடும்பத்தினருக்கும் அன்பர்களுக்கும் "மக்கள் சிந்தனை" ஆழ்ந்த இரங்கலை வருத்தத்துடன் புலப்படுத்திக் கொள்கிறது. இப்பெருமகனாரின் நல்லுயிர் ஆதிபகவன் திருவடி நீழலில் இன்ப அமைதி பெற "மக்கள் சிந்தனை" இறைஞ்சுகிறது.

– ஆசிரியர்

## உலகத் திருக்குறள் பேரவை - மதுரை மாவட்டம்

மதுரை பிப்ரவரி, 21,22,23 – 2014 தேதிகளில் உலகத் திருக்குறள் பேரவை மதுரை மாவட்டம் சார்பில் திருக்குறள் திருவிழா நடைபெற்றது.

தமிழகமெங்கும் கல்லூரி – மேனிலைப் பள்ளி மாணவ – மாணவியர் ஐம்பதாயிரத்திற்கு மேற்பட்டவர் கலந்து தேர்வு எழுதினார். கடந்த முப்பத்தைந்து ஆண்டுகளாக நடைபெற்றுவரும் தேர்வில் வெற்றிபெற்ற மாணவ – மாணவியர்களுக்கு தங்கமுலாம் – வெள்ளிப் பதக்கங்கள், சான்றிதழ்கள் வழங்கி அருளுரை வழங்கி தவத்திரு குன்றக்குடி அடிகளார் உரையாற்றினார்கள்.

விழாவிற்கு உ லகத் திருக்குறள் பேரவை பொதுச்செயலாளர், "திருக்குறள் செம்மல்" திரு. ந. மணிமொழியன் தலைமை தாங்கினார். பொதுச் செயலாளர் புதுக்கோட்டை திரு.தி.சு. மலையப்பன், பொருளாளர் புதுக்கோட்டை திரு. சீனு. சின்னப்பா பல்கலைக்கழக தகைசால் பேராசிரியர் முனைவர் இரா. மோகன், பேராசிரியர் சென்னை தி.இராசகோபால், மாவட்டச் செயலாளர், கவிஞர் மார்சல் முருகன் ஆகியோர் மேடையில் உள்ளனர்.

விழாவைத் தொடங்கிவைத்து மாவட்டத் துணைத்தலைவர், மேனாள் துணை ஆட்சியர் கா. கருப்பையா உரையாற்றினார்.

துணைச் செயலாளர் அ.கி.செ.திருமாவளவன் வரவேற்றார்.

செயலாளர் கவிபாரதி ஆர். அசோக்ராஜ் நன்றி கூறினார்.

மூன்று நாள் விழாவில், ஆய்வரங்கம், கருத்தரங்கம், மகளிர் அரங்கம், கவியரங்கம், வழக்காடு மன்றம், திருக்குறள் கருத்துக்களை வலியுறுத்திப்பட்டிமன்றங்கள் சிறப்பாக நடைபெற்றது.



**சங்கத் தமிழும் சைவத்தமிழும் பழுத்த பழந்தமிழ்ப்புலவர்**
**முனைவர். திருமிகு. கு. சுந்தரமூர்த்தி அவர்கள்**
**மறைவிற்கு அஞ்சலி!**

செந்தமிழ்ப்புலவர் சுந்தரமூர்த்தி
வந்தனைக் குரிய பனசைப் பல்கலைக்
கழகமீன்ற பைந்தமிழ்ச் செல்வர்!
கழக நூல்களை ஆய்ந்த வித்தகர்!
திருக்குறட் கொத்து உரையுடன் தந்த
பெருமைக்குரியர் பனசைப் பதிப்பில்
குறள்நெறி காட்டி ஆய்ந்த முன்னுரை
திறனுடன் தொல்காப்பியம் எலாம் ஆய்ந்த
“காப்பிய விருது” பெற்ற தமிழ்க்கடல்!
செப்பிடும் திரிவாசகத்தை விரித்தே
பேசிட வல்லவன்! இழுமெனும் இசையில்
வாசிதீர ஓதிடவல்லவன்! பனசைக்
காசிவாசி அருணந்தி முனிவர்
சிருட்டியில் ஒருவர்! அருணெறித்தந்தை
அருணெறி போற்றிய ஆர்வலர் இவரே!
தருமை ஆதீனப் புலவராய் ஆங்கு
அரிய நூல்களை வெளியிட்டுள்ளார்!
பெரிய புராண உரையும் தந்துள்ளார்!
சாத்திரம் பதினான்கின் உரைகள்பல!
தோத்திரம் வரலாற்றுரைகள் பல!
வழங்கிய இக்கால இளம்பூரணர்!
பழகிய மடத்தின் தலைவர் பலரையும்
“குருமூர்த்தி”யெனக் கூவி வணங்குவர்
திருவருள் உலகினில் ஒன்றிய
சுந்தரமூர்த்தி நினைவைப் போற்றுவோம்!

– தா. குருசாமித் தேசிகர்



# மக்கள் கல்வி நிலையம்

(மனிதவள மேம்பாட்டு அமைச்சகம், இந்திய அரசு)

குன்றக்குடி - 630 206

Phone: 04577 - 264567 Mobile : 94433 64200

குன்றக்குடி மக்கள் கல்வி நிலையம், கிராமம் மற்றும் நகர்ப்புற மக்களுக்கு கீழ்க்கண்ட தொழில்நுட்ப பயிற்சிகள் வழங்கிவருகிறது. பயிற்சி நிறைவு பெற்றபின் சான்றிதழ்களும், தொழில் துவங்க ஆலோசனைகளும் வழங்கப்படும். சுய உதவிக் குழுக்கள், கிராமப்புற மக்கள், இளைஞர்கள், பெண்கள் அனைவரும் இந்த வாய்ப்பை பயன்படுத்திக்கொள்ளுமாறு கேட்டுக் கொள்கிறோம்.

இயக்குநர்

**மக்கள் கல்வி நிலையம், குன்றக்குடி**

## பயிற்சிகள் (TRADES)

1. தையல் பயிற்சி, 2. அழகுக்கலை, 3.லெதர் & ரெக்ஸின் பொருட்கள் தயாரித்தல், 4. பற்றவைப்பு (ஆர்க் & கேஸ் வெல்டிங்), 5.செல்போன் பழுது நீக்குதல், 6. T.V, Radio- பழுது நீக்குதல், 7. எம்ப்ராய்டரி 8. பனை ஓலைப் பொருட்கள் தயாரித்தல், 9.வீட்டு வயரிங் வேலை செய்தல், 10. இரண்டு சக்கர வாகனம்பழுது நீக்குதல், 11. ஆபரண நகை தயாரித்தல், 12. திரை அச்சு வேலை, 13. சேலை டிசைனிங், 14. கைவினைப் பொருட்கள் தயாரித்தல், 15.பொம்மைகள் தயாரித்தல், 16. காகித உறை மற்றும் பைகள் தயாரித்தல், 17. வீட்டு உபயோகப்பொருட்கள் பழுது நீக்குதல், 18. உணவுப் பொருட்கள் தயாரித்தல், 19. பேப்ரிக் பெயிண்டிங், 20. சாக்பீஸ், மெழுகுவர்த்தி, பினாயில், சாம்பிராணி தயாரித்தல் 21. கயிறு திரித்தல், 22. GFRB பொருட்கள் தயாரிப்பு, 23. சேலை புதுப்பித்தல் சுருக்கம் நீக்குதல், 24. எலக்ட்ரானிக் சோக் தயாரித்தல், 25. கூடை முடைதல், 26.உல்லன் நிட்டிங் 27. நாப்கின் தயாரித்தல், 28. தையல் இயந்திரம் பழுது நீக்குதல், 29. போட்டோ லேமினேசன், 30. ஐஸ்கிரீம் தயாரித்தல் 31. காளான் வளர்ப்பு, மண்புழு உரம் தயாரித்தல்,

| | | |
|---|---|---|
| தகுதி | : | தன்முனைப்பு, தன் ஆர்வம் மட்டும். |
| பயிற்சி நேரம் | : | பயிற்சி நாள்தோறும் இரண்டு மணி நேரம் மட்டும். ஒன்றுக்கும் மேற்பட்ட பயிற்சிகளில் சேரலாம். |
| குறிப்பு | : | ஒவ்வொரு பயிற்சிக்கும் பயிற்சி நிறைவு பெற்றபின் தேர்வின் அடிப்படையில் சான்றிதழ்கள் வழங்கப்படும். |

மக்கள் சிந்தனை இதழ் சந்தா மற்றும் விளம்பரங்களுக்கு

**நிர்வாகி, மக்கள் சிந்தனை, குன்றக்குடி – 630206**

தொலைபேசி எண் : 04577 - 264227

**BOOK POST**

**Book pocket containing printed matter**

**MAKKAL CHINTHANAI - March - April 2014**

**Price Rs. 8-00**

Date of Publication 21-04-2014



பெறுநர் திருவருள்திரு. சுவாமிகள் அவர்கள்,

திரு கோவிலூர் ஆதீனம், கோவிலூர் அவர்கள்

மானகிரி-(அஞ்சல்), காரைக்குடி-(வழி).

அச்சிட்டோர் : சண்முகநாதன் அச்சகம், குன்றக்குடி. ✆ : 264166